

# அம்ருதா

AMRUDHA

வேள்வி 14 கலசம் 160
Volume 14 Issue 160

நவம்பர் 2019 ரூ. 25
November 2019 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism

மாலதி மைத்ரி
ஹாருகி முராகமி
விட்டல்ராவ்
உதயசங்கர்
டி. கண்ணன்
அ. ராமசாமி
டிசே தமிழன்
பாவண்ணன்
எம். ரிஷான் ஷெரீப்
அ. முத்துலிங்கம்
நடேசன்
ஷங்கர்ராமசுப்ரமணியன்





## தமிழ் மர்லின் மன்றோக்கள்

# அட்சரா வெளியீடுகள்


















































**அட்சரா பதிப்பகம்**

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,

கேள்வி 14 கலசம் 160



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

நவம்பர்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# தமிழ் மர்லின் மன்றோக்கள்



**மாலதி மைத்ரி**

வாழ்வில் தோல்வியும் துன்பமும் சராசரி பெண்களுக்குரியவை; நிலைகுலைவும் தற்கொலையும், அறிவும் திறமையும் இல்லாமல் அடங்கிக்கிடக்கும் பெண்களுக்குரியவை. அறிவால், திறமையால், கலையால் சாதனை புரியும் ஒரு பெண் சமூகத்தில் மதிப்பும் செல்வமுமடைந்து, போற்றுதலுக்குரிய இடத்தையடையலாம்; அவள் வாழ்வு வண்ணமயமாகும், மரணத்தையும் வெல்லலாமென்று பள்ளிப் பருவத்தில் பேசிக்கொள்வோம். அது பெண்களின் புதிய யுகம் பற்றிய கனவுகளைத் தந்தது. கலை, அரசியல், விளையாட்டெனச் சாதனை புரிந்து புகழ்பெற்ற பெண்களை வியந்து கவனித்துக் கொண்டிருந்தோம். நாளைய உலகம் அறிவும் திறமையும் பெற்ற பெண்களுக்கானது என்ற நம்பிக்கை என்னைப் போன்ற சிலரிடம் உருவாகியிருந்தது.

இந்திராகாந்தி ஆட்சியை இழந்தும் மீண்டும் ஆட்சியில் அமர்ந்தது அவரின் வலிமையை மட்டுமல்ல,இந்தியப்பெண்கள் பெண் தலைமைக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்ற தோற்றத்தைத் தந்தது. ஒற்றைப் பெண்ணாக உலக அரசியலில் அவர் பேசப்பட்டதை பத்திரிகைச் செய்திகள் முதல் பக்கத்தில் சொல்லின. இன்னொரு பக்கம் நடிகைகள் நடிப்பால், திறமையால் சமூகத்தைக் கட்டிப்போட்டு புகழின் சிகரத்தை எட்டி அனைவரையும் அசரடித்தார்கள். அவர்கள் நினைத்தால் எதையும் அடைய முடியும், எதையும் விலை கொடுத்து வாங்க முடியும். ரசிகர் கூட்டமோ அவர்கள் காலடியில் கிடந்தது. நடிகைகள் என்றால் தேவதைகள் போலப் பெண்களின் மனதிலும் மயக்கம் தந்துகொண்டிருந்தனர்.

'அழகுதேவதைகள்' போல உலவிய நடிகைகள் ஆண்களைவிட அதிகம் சம்பாதிக்க முடிகிறது, இன்பத்தைத் தவிர அவர்கள் வாழக்கையில் வேறு எதுவும் நிகழவாய்ப்பில்லை, தோல்வியென்ற பேச்சுக்கே இடமில்லையென்று நம்பியிருந்த எங்கள் தலையில் இடியாய் இறங்கியது ஷோபாவின்(1962-80) மரணம். பதினேழு வயதுதான் ஊர் முழுதும் அவரைப் பற்றியே பேச்சு, உலகம் வியக்கும் திறமை, ஒவ்வொரு ஆண்டும் விருது;ஆனால், என்ன ஆனது. கயிற்றில் தொங்கிய அவரதுடல் கனவுகளை அடித்து நொறுக்கியது.

அதே ஆண்டு சாவித்திரியின்(1936-81) அசைவற்ற உடல் படங்களாய் வந்து இறுதியில் உயிரற்ற படமும் வந்தது. நடிகையர் திலகம், பெண்களின் வெற்றி மாடலென்று முன் தலைமுறை கொண்டாடிக் கொண்டிருந்த அவரைப்பற்றி ஆயிரம் கதைகள். மதுவுக்கு அடிமையாகி அடைந்ததையெல்லாம் இழந்த அபலை, ஆணவத்தால் அழிந்தவர், பெண்கள் அளவுக்கதிகமாகப் பணமும் புகழும் அடைந்தால் இறுதியில் இப்படித்தான் ஏதுமற்று போவார்கள், நம்பிக்கெட்ட துரோகத்தின் உதாரணமென்று பல கதைகள் உலவின.

ஷோபாவுக்கு 18 வயதுக்கூட முடியவில்லை என்பதே நம்பமுடியாமல் இருந்தது; கோமாவில் விழுந்த சாவித்திரிக்கு 45 வயதும் முடியவில்லையென்பது காலத்தையே குழப்பியது. இவர்கள் இருவரைப் பற்றியும் பெண்கள் பேசியதும் ஆண்கள் பேசியதும் முற்றிலும் வேறுவேறு கதைகள். இருவருமே 16 வயதிற்குள் மணமாகியிருந்த ஆண்களின் காதல் அடிமைகளாக மாறி யிருந்தவர்கள் என்பது மட்டும் உறுத்திக்கொண்டிருந்தது. கணவன், குடும்பம் என்பதெல்லாம் இவர்கள் வாழ்க்கையில் என்னவென்ற கேள்வி மீந்திருந்தது. இந்தக் கணக்கையெல்லாம் பின்னாளில் மாற்றிப் போட்டது



'ekakini' மலையாளப் படத்தில் ஷோபா

*சுமிதா(1960-96)என்ற ஆணுலகராஜபோதை. குடும்பம், கணவன் என்ற கட்டுகள் இல்லாமல் வாழ்ந்தும் பிணமாய் கண்டெடுக்கப்பட்ட அவருடைய உடல் திரையுலகில் பெண்களின் இடத்தைக் கூச்சலிட்டுச் சொன்னது.*

குடும்பம் ஒரு மூடுண்ட அமைப்பு, கலைத்துறை திறந்த அமைப்பு. குடும்ப வெளியில் பெண்ணின் உடலும் மனமும் இருப்பும் முழுமையாக மறைக்கப்படுகிறது. கலைவெளியில் பெண் உடலும் இருப்பும் அடையாளமும் மறைப்பே இன்றி சமூகம் முழுதும் வீசியெறியப்படுகிறது. குடும்பத்தில் உருவமழிந்த பெண், திரையில் உருபெருக்கப்பட்ட பெண். திரையும் கலையும் பெண்களை என்னவாக மாற்றுகிறது? ஆண்களின் களிப்பு, போதை, காட்சி யின்பம் திரைப்பெண்களை என்னவாக மாற்றுகிறது?

குடும்பம், காட்சி உலகம் இரண்டிலும் ஆணே மையம், ஆணே அடிப்படை, ஆணே துய்ப்பவன். ஆண்கள்தான் சமூகம், பெண்கள் அதன் துணைத்துண்டுகள், ஒட்டிவைக்கப்பட்ட அங்கம். அவர்கள் தனியர்கள், உதிரிகள். குடும்ப வெளி பகலென்றால், கேளிக்கை வெளி இரவு. குடும்பத்திற்குள் பெண் கற்புக்கடம் பூண்ட கண்ணகி; கேளிக்கை, கலை என்ற இடத்தில் பொதுமகள், பரத்தை, கணிகை. குடும்பத்தில் பெண் உடல் உழைப்பு இயந்திரம், ஒருவனுக்கு மட்டும் இன்பம் தரும் சாதனம், அவளே உடமைப் பொருள்; கேளிக்கை வெளியில் அவள் உடல் முதலீடு, அவளே பண உற்பத்தி இயந்திரம்.

ஒரு பக்கம் புனிதம், தாய்மை, அன்பு, இன்பம், தெய்வாம்சம், தியாகத்தின் பிறப்பிடம் என்று பகுத்தறிவற்ற பெண்களை உருவாக்கும் சமூகம், மற்றொரு பக்கம் அழகு, கவர்ச்சி, போதை, கேளிக்கை,

காமக்களிப்பூட்டும் பதுமை என அதற்கு முற்றிலும் எதிரான பெண் அடையாளத்தை உருவாக்குகிறது. இரண்டிற்குள்ளும் பெண் உடல் சிறைவைக்கப்பட்டு பெண் அறிவு, பெண் மனம் அழிக்கப்படுகிறது.

பெண்கள் கலை, திறமை, அறிவு, நுட்பம், பயிற்சி, கடின உழைப்பென தங்களை முன்னிறுத்தினாலும் தொடர்ந்து அவள் உடல் மட்டும் வெறும் தசையாகவே அடையாளப்படுத்தப்படுகிறது. அதன் ஒவ்வொரு அசைவும் நளினம், கவர்ச்சி, காமக்கிளர்ச்சி என்ற ஆண் மொழியால் வரையறுக்கப்படுகிறது. இதனை முதலீடாக்கிய திரைத்துறையோ கலை என்ற முகமூடிக்குள் மாபியாக்களையும் தாதாக்களையும் தரகர்களையும் கேடிகளையும் வளர்க்கிறது, அவர்களின் கட்டுப்பாட்டில் இயங்குகிறது. அவர்களைக் கடந்து பெண் கலைஞர்கள் எதையும் செய்ய முடிவதில்லை. அது பணம், ஆண் திமிர் என்ற அடிப்படையில் இயங்கும் உலகம். அதில் பெண் உடல், பெண் பிம்பம் இரண்டுமே வணிக அதிகாரத்தின் கருவி. பெண் பிம்பத்தை விற்பவன், பெண் உடலைத் தன் அடிமையாக அடைத்து வைத்துக்கொள்கிறான். அந்த உடலையே தன் முதலீட்டுக்காக விற்கவும் செய்கிறான். முதலீடு, முதலீட்டுப் பெருக்கம், முதலீட்டை உருவாக்கும் இயந்திரமென கலை என்ற அடையாளம் கொண்ட பெண்ணுடல் ஆணின் கருவியாககையாளப்படுகிறது.

கலை, கேளிக்கை இரண்டும் ஒன்றா; நடிகை என்பவர் ஒரு கேளிக்கை இயந்திரமா என்ற கேள்விக்கே இடமில்லை. ஏனெனில், நடிகை என்பதே ஆண்களிப்பின் அங்கமென்று உறுதிசெய்யப்பட்டுவிட்ட ஒன்று. கலை என்பது அதில் வெறும் தோற்றப்பிழை. அதனால்தான் பிரபலக் கொள்ளையன் தான் கொள்ளையடித்த கோடிகளை நடிகைகளுடன் உல்லாசமாக இருக்கச் செலவழித்தான் என்ற செய்தி, மிதுனராசி அன்பர்களுக்கு இன்று செலவு அதிகமாகலாம் என்ற அறிவிப்பு போலக் கடந்து போகப் பழகியிருக்கிறோம்.

கலைஞர்களும் நடிகைகளும் ஏன் பாலியல் தொழிலுடன் இணைத்தே அறியப்படுகிறார்கள்? ஏன் அவர்களில் பலர் பாலியல்தொழிலாளிகளாக மாற்றப்படுகின்றனர்? கலைமகள், கலைவாணி என்ற சொற்கள் காமகருவிகளானதெப்படி?

கலை, கலைத்துறை என்ற பெயரில் இங்கு என்ன நடந்துகொண்டிருக்கிறது? இந்தக் கலைத்துறை மக்கள் கலையை வளர்த்ததா, மானுட அறத்தைப் போற்றியதா? ஒடுக்கப்பட்டோரின், பெண்களின் கதைகளை ஏன் இவை பேசவில்லை என்ற கேள்விகளை விடுங்கள். கலையைக் கொண்டாடுவோம், கலையை வளர்கிறோமென்று சொல்லும் இக்கூட்டம் தங்கள் துறைக்கு அடித்தளமாக உள்ள, தங்களை முதலாளிகளாக்கிய, தங்களை மகிழ்விக்க ரத்தமும் வேர்வையும் சிந்தும் பெண் கலைஞர்களை எந்த இடத்தில் வைத்துள்ளது, அவர்களுக்கு என்ன வாழ்வை அளித்துள்ளது. பெண் கலைஞர்களின் பாதுகாப்பு, உரிமைகள் அத்துறைக்குள் என்ன நிலையில் உள்ளன.

அழகுதேவதைகள், கனவுக்கன்னிகள், உடல்


சாவித்திரி

மண்ணுக்கு உயிர் அவளுக்கு என்று காட்சி இன்பம் தரும் கலைஞர்களைக் கொண்டாடிக் களிக்கிற சமூகம், அதன் பேச்சிலும் மூச்சிலும் நனவிலும் கனவிலும் பெண் தசையால் நிரப்பி உச்சமடைகிறது. அந்த நடிகைகளின் வாழ்வோ பொறிக்குள் சிக்கிய எலிபோல் குமைந்து கொண்டிருக்கிறது. பெண் கலைஞர்களை திரையில், மேடையில் செட் பிராப்பர்டியாக பயன்படுத்திக்கொண்டவர்கள் தங்கள் வீட்டுக்குள்ளும் பிராப்பர்டியாக்க மாற்றிக் கொள்கின்றனர். இதனை ஒரு மரபாகவே மாற்றி வைத்திருக்கும் சமூகம் அதிகாரத்தையும் அச்சுறுத்தலையும் பயன்படுத்தி, வயதுபோன பெரும் முதலைகள் பல பெண்களைத் தம் அடிமைகளாக வைத்துக்கொள்வதை பெருமையாய்க் கொண்டாடவும் செய்கிறது.

கலைத்தாகம், கலைக்காதல் அத்துடன் காவியக்காதல், தெய்வீகக்காதல் என்ற பெயரில் வேட்டையாடக் காத்திருக்கும் 'மைனர்களின்' துரத்தலில் சிக்கும் பெண்களின் கதைகள் இன்னும் முடியாமல் தொடர்கிறது. ஓநாய்களின் தந்திரங்களைப் புரிந்துக்கொள்ள முடியாத பருவத்தில் வெற்றிக் கோப்பைகளைப் பறிக்கத் தம் துறைச் சார்ந்த எஜமானர்களின் 'காதல் பொறிக்குள்' அடைபட்டு அதையே பாதுகாப்புக்கானது என்று தஞ்சமடைந்த பெண் கலைஞர்கள் ஏமாற்றங்களைச் சந்தித்து, தோல்வியில் சிதைந்த கதைகள் நெடுங்கதையாய் நீள்கிறது.

வன்முறையை ஆண் குணமாய் வெளிப்படுத்தும் மூர்க்கமான ஆணை ஒரு பெண் எளிதாய் அடையாளம் கண்டுக்கொள்வாள், அவனால் ஏமாற்றப்பட்டால் இந்த அற்பனுக்காக தன் வாழ்வைத் தொலைக்க வேண்டுமா என்ற வெறுப்பு ஒரு பெண்ணுக்குள் எழும். ஆனால், அறிவுஜீவி, உலகத் திரைக்கலை அறிந்த


'மீரா' படத்தில் எம்.எஸ். சுப்புலட்சுமி


கே.பி. சுந்தராம்பாள்

மேதையென பலரால் கொண்டாடப்படக்கூடிய 40 வயது ஆணைக் கண்டு வியக்கும் ஒரு சிறுமி, தான் மதித்த அந்த ஆணால் ஏமாற்றப்படும்போது அதை எப்படிப் புரிந்துகொள்வதெனக் குழம்பிப் போகிறார். தன் குழந்தைப் பருவத்திலிருந்து இதைவிடக் கொடூரமான ஆண்களைச் சந்திந்திருந்த அவளுக்கு, இவனும் அப்படித்தானா எனப் புரியவரும் போது உலகமே கயவர்களின் கோட்டையாக, துரோகிகளின் பேயுருவமாகத் தோன்றுவது இயல்பே. இதுவரை நம்பியது மாயையென உடைய, எதிர்கால நம்பிக்கையும் தகர்ந்துபோக, வாழ்வதில் அர்த்தமில்லையென்று சுருக்குக் கயிற்றில் தன் வாழ்வை முடித்துக்கொள்கிறார் 17 வயது சிறுமி ஷோபா. இளவயதிலேயே சிறந்த நடிப்புக்குத் தேசிய விருது பெற்றச் சாதனைச் சிறுமியின் வாழ்வை நாசமாக்கி, அவரை சாவுக்குத் தூண்டிய பாலு மகேந்திரா போன்றவர்கள் மகா கலைஞர்களாக வரலாற்றில் வாழ முடிகிறது.

நடுத்தர வயது பிரபலங்கள், அறிவு தெளியாத சிறுமிகளைப் புகழுரைகளால் மயக்கி அவர்கள் மீது நிகழ்த்தும் பாலியல் அத்துமீறலுக்கும் பீடோபைல் மேனியாவுக்கும், காதல் என்று பெயரிடுவது இங்கு வழக்கமாகிவிட்டது. காதலை இழிவுபடுத்தும் இந்தக் கிரிமினல் பிரபலங்களை காதல் மன்னர்கள் என்று கொண்டாடும் சமூகம் பெண்களை மேலும் அவமதிக்கிறது.

பிரபலமாக உள்ள ஆண் அதிகாரத்துடன் ஒரே துறையில் இருந்துவிட்டால் மகள் வயது சிறுமிகள் எளிதான இலக்காக மாறிவிடுகின்றனர். அந்தப் பெண்கள் அடையும் வெற்றிதான் இட்ட பிச்சை என்ற களிப்பும்,அதிதிறமைசாலியான ஒருத்தியை அடிமையாக்கிவிட்டோம் என்ற ஆணவமும் அந்த ஆண்களின் கிரீடத்தில் சொருகிய இறகல்லவா. காதல் மன்னர்களிடம் சிக்கிய பெண்கள் பிறகு வாழ்ந்தால் என்ன செத்தால் என்ன.

நடிகைகளின் மர்ம மரணங்கள் நிகழும்போது கேளிக்கைத் துறையில் பெண்களுக்கு நிகழும் உழைப்புச் சுரண்டல், பாலியல் சுரண்டல், பொருளாதாரச் சுரண்டல், ஆளுமைக் கொலை பற்றிய பேச்சுகள் சமூகத்தில் சிறு புழுதியைக் கிளப்பிவிட்டு வந்த வேகத்திலேயே அடங்கிவிடுவதும், குற்றவாளிகளை நோக்கி ஒற்றை விரலைக்கூட நீட்ட மறுக்கும் சமூகம் பெண்களின் அந்தரங்க வாழ்க்கை, சாகசம் பற்றிய கதைகளைப் பேசி இழி இன்பத்தில் திளைப்பதும் வழமையாகிவிட்டது.

தொடக்க காலகட்ட தமிழ் சினிமாவில் நடிக்க வந்த பால்யக் கலைஞர்கள் சிறுவயதில் தந்தையை இழந்தவர்களாகவும் தந்தையற்ற உடைந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும் பெரும்பாலும் வறுமையில் சிக்கியவர்களாகவும் இருந்தார்கள். இவர்கள்தான் ஆண்களை மிஞ்சி திறமையால் சாதித்துக் காட்டினார்கள்.'நல்லக் குடும்பத்துப் பெண்களை கலைத்தாய்க்கு பிடிப்பதில்லை.'

புகழ்மிக்க பெண் கலைஞர்களின் திறமையுடன் நிற்கமுடியாத, அவர்களுக்கு எந்த வகையிலும் ஈடாகாத ஒரு ஆண், உதவியாளருக்கு உரிய தகுதி மட்டுமே உடைய ஒரு ஆண், மேதமையுடைய ஒரு பெண்ணை ஆட்டிப்படைக்க முடிவது ஆணாதிக்க அமைப்பினால் உருவாக்கப்பட்ட வன்முறைகளில் ஒன்று.

கிளிசரின் போடாமல் இடது கண்ணில் மட்டும் இரண்டு சொட்டுக் கண்ணீரை வரவழைத்து சோகத்தால் மெய்சிலிர்க்க வைத்த, சாவித்திரி அம்மா என்று கொண்டாடப்பட்ட நடிகை, தன் வாழ்க்கை

முழுக்க நிஜமாகவே அழுதுகொண்டிருந்தார் என்று சொல்லப்பட்ட போது பெண் கலைஞர்களின் வாழ்வும் சாவும் யாரால் இயக்கப்படுகிறது, யாரால் ஆட்டிவைக்கப்படுகிறது என்ற கேள்விக்கு பதில் கிடைக்கிறது.தங்களின்கலைத்திறமையால்சமூகத்தை மகிழ்வித்து, மக்களின் மனதில் அழியா இடம்பெற்ற பல நட்சத்திரங்கள், தாங்கள் அடைந்த புகழ் பொருளுடன் ஒரு சராசரிப் பெண்ணாக கணவன், குழந்தை, குடும்பமென வாழ்வதற்கு ஏங்கி, அந்தச் சிறிய கனவும் நிறைவேறாத துயரம், தங்கள் வாழ்வை முடித்துக்கொள்வதற்கான பல காரணங்களில் ஒன்றெனத் தெளிவாகிறது.

கலைஞர்கள் என்ற அடையாளமும் பெண் என்ற அடையாளமும் குழம்பும் இடத்தில் அவர்கள் சிக்கிக்கொள்கிறார்கள். கேளிக்கை, களிப்பு என்று அவர்கள் மீது சுமத்தப்பட்ட அடையாளம் மனச்சிக்கலை உருவாக்குகிறது. ஒரு ஆணுக்கு இவை அனைத்தும் ஒரே சமயத்தில் நிகழ்வது பெருமையாக மாறுகிறது, அவனுடைய கேளிக்கைகள் சாகசங்களாக கொண்டாடப்படுகின்றன. கோப்பையில் குடியிருக்கும் கோமகன் ஆகிறார்கள், காதல் மன்னன் ஆகிறார்கள்.

பெண் கலைஞர்களுக்கான ஒவ்வொரு அடையாளமும் ஒன்றுக்கொன்று இணைய முடியாத குற்றவுணர்வால் மோதிக்கொள்கின்றன. உலகப் புகழ்பெற்ற நடிகையானாலும் ஒரு முதலாளி அல்லது பெரும்பணக்காரன் ஒருவனின் பாலியல் அடிமை என்ற நிலையோ, வெளியுலகில் தேவதையாக கொண்டாடிவிட்டு தனி வாழ்க்கையில் நீ வெறும் பொம்மைதானென்று துறை சார்ந்த ஆண்கள் அவர்களை நடத்தும் முறையோ, நடிகைகளின் கலை அடையாளத்தைப் பிளந்து போடுகிறது. அதற்குப் பிறகு அவர்களின் வாழ்வு முற்றிலும் ரகசிய ஒப்பந்தங்களால் நடத்தப்படுகிறது. எளிய ஆசைகள் கூட அவர்களைக் குற்றவுணர்வில் சிதைக்கிறது. இதனை இன்றுள்ள உலகமயமான கேளிக்கைச் சந்தை சார்ந்து இயங்கும் நடிகைகள் சிலர், “அது அப்படித்தான் அதற்கென்ன” என்பது போலக் கடந்து செல்ல முயற்சிக்கின்றனர். ஆனால், அது அவ்வளவு எளிதாக நடந்துவிடுவதில்லை. ஸ்ரீதேவி அப்படிக் கடக்கவே முயற்சித்தார். கேளிக்கைத் தொழிற்சாலையின் மர்ம உலகில் அவரும் மர்மமாக மறைந்தார்.

புகழின் உச்சத்தை அடைந்து தங்கள் திறமைகளால் மின்னிய தாரகைகள் உலகளவில் புகழடைந்திருந்தாலும் மாநிலத்தை ஆளும் முதல்வரே ஆனாலும் தங்கள் தனிப்பட்ட வாழ்வில் மகிழ்வின் ஈரம் வற்றி மருகி சாம்பலாய் தங்களுக்குள் மடிந்தார்கள். தவிர்க்க முடியாத தனிமைப்படுத்தல், விளக்கப்படாத மர்ம மரணங்கள், பெரும்பாலும் புதிராக வாழ்ந்து மறைந்தார்கள். அவர்களுடைய அமைதியான, மகிழ்ச்சியான, தனிப்பட்ட வாழ்க்கை மறுக்கப்பட்டது பற்றியோ, குலைக்கப்பட்டது குறித்தோ அத்துறைக்கும் அதனைக் கொண்டாடும் சமூகத்திற்கும் துளியளவு குற்றவுணர்வில்லை. கே.பி. சுந்தராம்பாள், எம்.எஸ். சுப்புலட்சுமி, சாவித்திரி, ஜெயலலிதா, ஷோபா, சில்க் சுமிதா, நிஷா, ஸ்ரீதேவி



சதாசிவம்

எனப் பட்டியல் நெடியது.

பதினான்கு வயது சிறுமியாக கேமரா முன் நின்ற சரசவாணி தேவிக்கு, பிரமாண்ட மெட்ராஸ் பட்டினமளித்த மிரட்சியும் சினிமா தொழிற்சாலையின் மிரட்டலுக்குமிடையில் ஜெமினி கணேசன் காட்டிய பரிவில் கொஞ்சம் தந்தையின் சாயலைக் கண்டிருக்கலாம். இரண்டு மூன்று புகைப்படம் எடுத்துவிட்டு பிழைப்புக்கு நடிக்க வந்த சிறுமியின் வாழ்க்கையை, இரண்டு மனைவிகளும் இரண்டு குழந்தைகளுமுடைய முதிர்ந்த ஆண் அபகரித்துக் கொள்வதெல்லாம் புராண நாடகம் போலத்தான் இருக்கிறது.

ஜெமினி கணேசனின் நிர்ப்பந்தத்தால் நிகழ்ந்த ரகசியப் பால்யத் திருமணத்தை வெற்றிகரமாக்கி தனது வாழ்வை, தான் மட்டுமே வாழ வேண்டும் என்ற பிடிவாதமும் வேட்கையும் துணிச்சலும் சாவித்திரியிடம் அதிகமாகவே இருந்தது. சினிமாவுக்குள் தான் யார், மக்களுக்கு எது தேவை, திரைப்படப் புகழ் என்பதென்ன, அதனை பெறுவதெப்படி, அதன் மூலம் கிடைக்கும் பொருளாதார வளமென்ன, தனக்கு வாழ்வும் வளமும் புகழுமளித்த இந்தச் சமூகத்துக்கு தான் திருப்பி அளிக்க வேண்டியதென்ன என அவரிடம் திட்டங்கள் இருந்தன. அவருக்கென குடும்பம் ஒரு கனவாக இருந்தது போலவே, இயக்கம், படத்தயாரிப்பு, சாதனைகளென கலைக் கனவுகளும் இருந்தன.

இவற்றை எந்தச் சிரமமும் சிக்கலுமின்றி செய்து பொன்மனச் செம்மலாக மாறி, தமிழகத்தை ஆளும் பேறு


ஜெமினி கணேசன்

ஒரு ஆணுக்குத்தான் அமையுமே தவிர பெண்ணுக்கு இல்லை. ஆனால், இந்த எதிர்ப்பார்ப்புகள் இன்றி தன் சக்திக்கு மீறிய கொடைகள் தரும் அழகிய மனதுடையவராகவாழ்ந்திருக்கிறார் நடிகையர் திலகம்.

'நடிகையர் திலகம்' (மகாநடி) வந்தபின் சில சர்ச்சைகள் கிளம்பின. 'எங்கள் குடும்பத்தைக் கலைத்தவர் சாவித்திரி, 'மகாநடி' படத்தில் என் அப்பாவை வில்லனாக சித்தரித்து அவமதித்துவிட்டார்கள்' என ஜெமினி கணேசனின் மூத்த மனைவியின் மகள் அளித்த பேட்டியைக் காண முடிந்தது.

முன்னாள் வேதியியல் பேராசிரியர், இரண்டு மனைவிகளுக்கு புருசன், இரண்டு குழந்தைகளுக்கு தகப்பன், சினிமாவில் வளர்ந்துவரும் கதாநாயகன், 34 வயதில் 16 வயது சிறுமியை ஏமாற்றி ரகசியத் திருமணம் செய்துகொண்டார். அவர், 'தனது தாய்க்குத் துரோகம் செய்தார்' எனச் சொல்ல முடியாத ஒரு மகளாக இவரை வைத்திருப்பது எது?இவரின் தந்தை பல பெண்களை ஏமாற்றியவர் என்பதுதானே பொதுவான செய்தி. ஆனால், அவர் காதல் மன்னன். அவருடைய தந்தை என்பதால் அவர் ஏமாற்றிய பெண்கள் எல்லாம் "குடும்பத்தைக் கலைக்க வந்தவர்கள்." படிப்பு, உலகறிவு, வளமான வாழ்வு எவ்வளவு இருந்தாலும் பெண்கள், ஆண்களின் மொழியிலேயே பேசவும் ஆண்களின் அடிமைப் பூதங்களாக கடமையாற்றி மகிழ்வதற்கும்தான், ஆணாதிக்க சமூகக் கட்டமைப்பும் ஆணாதிக்க மரபும் பயிற்றுவித்திருக்கிறது.

நான்கு பெண் குழந்தையும் மனைவியையும் தவிக்கவிட்டு, பதினைந்து ஆண்டுகள் இரவில் வீட்டுக்கே வராத தனது அப்பா ஜெமினி கணேசனின் மீது கோபப்படாமல், சாவித்திரி மீது பழிப்போடும் மகளின் உளவியலை நினைத்தால் கொஞ்சம் அச்சமாகத்தான் இருக்கிறது. புகழ்பெற்ற ஆணின் தவறுகள் கொடுமைகளடைந்த மகளாளே நியாயப்படுத்தப்படும், இதுதான் ஆணாதிக்கம். அவர் தனது தாயின் வலியைக்கூட புரிந்துக்கொள்ள முயற்சிக்கவில்லை. அதைப் பெண்களின் விதி என்று நம்பிக்கொண்டிருக்கிறார்.

வேறோரு பெண்ணுடன் படுக்கையில் தன் கணவனைக் கண்ட சாவித்திரி துரத்தியடித்ததுபோல், ஜெமினி கணேசனின் மூத்த மனைவியான தன் தாயால் ஏன் முடியவில்லையென்பதை அவர் யோசித்திருப்பாரா. ஒருவேளை இவரது கணவரும் இவரை விட்டுவிட்டு வேறுவேறு பெண்களுடன் போய் குடும்பம் நடத்திக் குழந்தைகள் பெற்றால், தன் புருசனை காதல் மன்னன் என்று கொண்டாடி மகிழ்வாரா இந்த டாக்டர்.

ஏமாற்றத்திலிருந்தும் துரோகத்திலிருந்தும் மீள தனது பிற்கால வாழ்க்கைத் துணையாய் மதுவைஅணைத்துக்கொண்டார் சாவித்திரி. நடிப்பு, வாழ்க்கை, மது எதுவாக இருந்தாலும் தன்னிடம் வந்து சேர்ந்ததை வெறித்தனமாய் காதலிக்க சாவித்திரியால் முடியும். இதற்கு முற்றிலும் எதிர்நிலையில் ஒருவர் நினைவுக்கு வருகிறார், எம்.எஸ்.சுப்புலட்சுமி.

அடைக்கலம் தேடிவந்த பால்யம் மாறாத பாடகி எம்.எஸ். சுப்புலட்மிக்கு, 'சகுந்தலா'வில் இணைந்து நடித்த நடிகர் ஜி.என். பாலக்கிருஷ்ணன் மீது காதல் உருவாகிறது. அதனைக் கலைத்து, இரு குழந்தைகளுக்குத் தந்தையான டி. சதாசிவம், எம்.எஸ்ஸை தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருகிறார். அவர்சாகும்வரை அவரே இசைக்குயிலை ஆட்டிப்படைத்தார். டி. சதாசிவம் இல்லையென்றால் எம்.எஸ். என்ற இசைக்குயில் நமக்குக் கிடைக்காமல் போயிருப்பார் என்ற வியாக்கியானம் பேசுபவர்கள், ஏன் இவை ஒரு ஆண் கலைஞருக்கு நேர்வதில்லையென கேள்வியெழுப்புவதில்லை. எம்.எஸ். அம்மா தன் விருப்பு வெறுப்புகளை தனக்குள் புதைத்துக்கொண்டு, 'என்னைப் பாட விட்டால் போதும் வேறெதும் நினைத்துப் பார்ப்பதேயில்லை' என ஒரு நேர்காணலில் சொன்னது ஸ்டாக்ஹோம் சின்ட்ரோம் மனநிலை.

'ஒரு கட்டத்தில் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ளத் துடித்த டி. சதாசிவத்தின் உறவிலிருந்து வெளியேற விரும்பிருக்கிறார். ஆனால், அவருக்கு வேறு மாற்று வழி என்ன இருந்தது?' என்றுஎம்.எஸ். அவர்களின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய டி.ஜே.எஸ். ஜார்ஜ் கேட்கிறார். எதற்குத் திருமணம் செய்துக்கொண்டீர்கள், மகிழ்ச்சிக்காகவா என்ற வாஸந்தியின் கேள்விக்கு, "பாதுகாப்புத் தரும் என்பதற்காக" என்ற பதிலில் வெளிப்படும் கசப்பும் துயரமும் ஒரு மேதைக்கு இச்சமூகம் இழைத்த வன்கொடுமையைச் சொல்கிறது.

"உங்கள் இசை பயணத்தில் சதாசிவம் மாமாவின் பங்களிப்பைப் பற்றி சில வார்த்தைகள்

சொல்லுங்க?”என்று மணி கிருஷ்ணசாமி கேட்க, “அவரின் ‘ஆளுகைக்கு’ கீழ் வந்த பின் எனக்கு எல்லாமே அவர்தான்” என்கிறார் சுப்புலட்சுமி. ‘மிஸீயீறீஷுமீஸீநீமீ’ என்ற வார்த்தையைதான் பயன்படுத்தியுள்ளார் பேட்டி எடுத்தவர். அன்பு, காதல் என்ற எந்த பதத்தையும் அந்த உறவுக்கு எம்.எஸ். அம்மா தரத் தயாராகயில்லை போலும். எம்.எஸ். அவர்களை ஊடகங்களுக்குப் பேட்டிக் கொடுக்க சதாசிவம் ஏன் அனுமதித்ததில்லை என்பதற்கு இதற்கு மேல் விளக்கம் தேவையா என்ன? பேட்டி எடுக்க வருபவர்களுக்கு காப்பி போட்டுக் கொடுக்க உள்ளே செல்வது அவருடைய பழக்கமென யாரோ பார்த்துக் குறிப்பிட்டிருந்தார்கள். கேட்போரின் நெஞ்சை இளக்கி தன் மாயக்குரலால் சொக்க வைத்து கர்னாடக இசை உலகை ஆண்டபேரரசி, தனது பாணி இசை வாரிசுகளை உருவாக்கவும் முடியாமல் போனதை அவர் வருந்திக் குறிப்பிட்டுள்ளார். இதற்கு காரணம் ஆணாதிக்கம் மட்டுமில்லை பார்ப்பனிய வன்மமும் சதியும் அதில் அடங்கியிருக்கிறது. நல்லவேளை டி. சதாசிவத்திற்கு பாட வராது, வெறும் மேலாளர் என்பதால்இன்னொரு ‘சாவித்திரி’ ஆகாமல் தப்பினார் எம்.எஸ் அம்மா.

கே.பி. சுந்தராம்பாள் கணவர் கிட்டாப்பாவும் கே.பி.எஸ். அம்மாவின் நாலரைக் கட்டை சுருதிக்கு ஈடுகொடுக்க முடியாமல் தனது தாழ்வுணர்ச்சியால் ‘ஜெமினி கணேசன்’ மாதிரியாகப் பார்த்தார். துரதிஷ்டவசமா, காலம் அவர் கணக்கை விரைவில் முடித்ததால் கே.பி.எஸ். அம்மாவுக்கு கிடைத்தது ஒருவகையில் விடுதலைதான். என்றாலும், இப்பொல்லாத ஆண் பிரிடேட்டர்களிடமிருந்துத் தப்பிக்க, இருபத்தைந்து வயதிலேயே தெய்வப்பக்தி சன்யாசமென்று முதுமையான தோற்றத்தில் தனக்குத்தானே ஒரு இரும்புத் திரையை போட்டுக்கொண்டார்.

கே.பி.எஸ்., எம்.எஸ் இருவரும் தங்கள் தன்னம்பிக்கையின் பேராயுதத்தால் இவ்வுலகை ஆண்டனர், எங்கள் உடலைத்தானே கட்டுப்படுத்த முடியும், குரலால் உலகை வென்றெடுக்கிறோமெனத் தனிப்பட்ட துயரங்களைப் புதைத்துக்கொண்டு தங்களைப் பட்டை தீட்டிக்கொண்ட வைரங்கள்.

கேளிக்கைத்துறை ஒரு சூதாட்டக்கூடம், பந்தைய மைதானம், வாய்ப்பு கிடைத்து வெற்றியடைந்தால் பிறத்துறைகளில் பணிபுரியும் ஒரு பெண் தன் வாழ்நாள் முழுதும் ஈட்டும் வருவாயை ஒரு விளம்பரத்தில், ஒரு திரைப்படத்தில் பெற்றுவிட முடியும். இவை கொடுக்கும் புகழ், அதிகாரம், வசதி இத்துறைகளில் சேவையாற்றும் பெண்களுக்கு பெரும் மயக்கமளிக்கிறது. நாடகம், சினிமா, விளம்பரத் துறைகளில் பெண்கள் பணிசெய்வது கண்ணியமற்றது; பெண்கள் உழைப்பு, உடல் ரீதியாகச் சுரண்டப்படுகிறார்கள் ஏமாற்றப்படுகிறார்கள் போன்ற விமர்சனங்களும் சமூகத் தடைகளும் பாதுகாப்பற்ற சூழலும் தொடர்ந்தாலும் பணம், புகழ், வண்ணமயமான வரவேற்பு போன்ற கனவை தினமும் வாழ்வில் பருகத்துடிக்கும் யாருக்கும் இவை துச்சமல்லவா.



பாலுமகேந்திரா.

இத்துறைக்குள்நுழையும்பெண் கலைஞர்களை தனது கட்டுப்பாட்டில் கொண்டுவர ‘பெரும் ஆளுமைகள், பெருங்கைகள்’ என்ற தோரணையில் ஒரு பெருங்கூட்டம் இன்றும் ஓநாய்கள் போல் இரைக்காக காத்திருக்கிறது. கலைச்சேவையாற்றும் பெண் கலைஞர்களுக்கு உள-உடல், சமூக, பொருளாதார, நெருக்கடியும் பாதுகாப்பின்மையும் நிரந்தர விதியாக இருப்பது ஏன்? கேரளத் திரைத்துறையில் பெண் கலைஞர்களின் பாதுகாப்புக்கும், உழைக்கும் பெண்களின் சட்டப்பூர்வ சமத்துவ உரிமைக்கும்,‘விமன் சினிமா கலெக்டிவ்’ நவம்பர் 2017இல் தனி சங்கமாகத் தொடங்கப்பட்டிருப்பது ஆரோக்கியமான போக்கு. ஆண்மைய அதிகாரத்துக்குத் துதிபாடி அடிமைத்தனத்தில் சுகம் காணும் தமிழ்த் திரைவுலகில் இதற்கான எந்த முன்னெடுப்பும் நடக்காமல் இருப்பது வியப்பொன்றும் இல்லை. பெண்களுக்கான அமைப்பை ஆண்களே ஆசிர்வதித்து உருவாக்கி அருளவேண்டுமெனகாத்திருக்கிறார்களோ என்னவோ. ●


**மாலதி மைத்ரி**

**<anangufeministpublication@gmail.com>**



**ஹாருகி முராகமி**
**தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்**

# ஒரு பூனையை தொலைத்தல்!

## என் தந்தையின் நினைவுகள்

எனது தந்தை குறித்து எனக்கு நிறைய நினைவுகள் இருக்கவே செய்கின்றன. நான் பிறந்ததிலிருந்து, பதினெட்டு வயதில் வீட்டை விட்டு வெளியேறும் வரை, அத்தனை பெரிதாக இல்லாத வீட்டில் ஒரே கூரையின் கீழ் வாழ்ந்து வந்ததை வைத்துப் பார்த்தால் அது இயற்கையானதே. பெரும்பாலான குழந்தைகளுக்கும் பெற்றோர்களுக்கும் உள்ளதைப் போன்றே, எனது தந்தை குறித்த எனது நினைவுகள் சில மகிழ்ச்சியானவையாகவும், சில அப்படிச் சொல்ல முடியாதவையாகவும் இருந்திருக்கலாம். ஆனால், என் மனத்தில் திட்டவட்டமாக உள்ள நினைவுகள் இந்த இரண்டு பிரிவையும் சேராதவை; சாதாரண நிகழ்ச்சிகள் தொடர்பான நினைவுகள்.

உதாரணத்துக்கு ஒரு நிகழ்ச்சி..

நாங்கள் சுகுகவாவில் (நிஷினோமியா நகரத்தின் ஒரு பகுதி, ஹியோகோ உள்ளாட்சி மாநிலம்) வாழ்ந்து வந்தபோது, ஒரு பூனையைத் தொலைப்பதற்காக ஒருநாள் கடற்கரைக்கு போனோம். அது குட்டி அல்ல; வயதான பெண் பூனை. கொண்டு போய் விடுவதற்கான காரணத்தை என்னால் நினைவுகூர முடியவில்லை. நாங்கள் வாழ்ந்துவந்த வீடு தோட்டத்துடன் கூடிய, ஒரு பூனைக்குத் தாராளமாக இடமுள்ள தனி வீடுதான். தெருவிலிருந்து வீட்டுக்கு வந்ததாக இருக்கலாம்; கர்ப்பமாக இருந்து எனது பெற்றோர்கள் அதன் குட்டிகளையும் பராமரிக்க இயலாதென்று கருதியிருக்கலாம். இந்தப் புள்ளியில் எனது நினைவு அத்தனை துல்லியமாக இல்லை.

பூனைகளை இப்படி விடுவது என்பது வழக்கமானதே; அதற்காக யாரும் விமர்சிக்கப் போவதில்லை. பூனைகளின் கருப்பையை அகற்றும் யோசனையெல்லாம் யாருக்கும் உதிக்கவேயில்லை. நான் அந்தச் சமயத்தில் நடுநிலைப் பள்ளியில் ஆரம்ப வகுப்புகளிலிருந்தேன். 1955 ஆம் ஆண்டாகவோ அதற்கு சற்றுப் பின்னரோ இருக்கலாமென்று கருதுகிறேன். எங்கள் வீட்டுக்கு அருகே அமெரிக்க விமானங்களால் குண்டுபோடப்பட்ட ஒரு சிதிலமான வங்கிக் கட்டிடம் இருந்தது - போரின் அப்பட்டமான வடுக்களைக் கொண்ட சில கட்டிடங்களில் ஒன்று.

என் அப்பாவும் நானும் அந்தக் கோடை நாள் மதியப்பொழுதில் பூனையை விடுவதற்காக கடற்கரைக்குப் புறப்பட்டோம். அப்பா, சைக்கிள் ஓட்ட, நான் பூனையை வைத்திருந்த பெட்டியை மடியில் வைத்தபடி பின்னால் அமர்ந்திருந்தேன். நாங்கள் சுகுகவா நதியின் வழியாக பயணித்து கொரோயின் கடற்கரைக்கு வந்து சேர்ந்து, அங்கிருந்த மரங்களுக்கு நடுவே பெட்டியை கீழே வைத்துவிட்டு, திரும்பிக்கூடப் பார்க்காமல், வீட்டுக்கு வந்துவிட்டோம். எங்கள் வீட்டிலிருந்து கடற்கரை இரண்டு கிலோமீட்டர்கள் தூரமாவது இருக்கும்.

அந்தப் பூனைக்காக வருத்தப்பட்டபடி, எங்களால் என்ன செய்யமுடியும் என்று ஆறுதல் சொல்லிக்கொண்டு வீட்டின் முன்னால் இறங்கினோம். இறங்கி, முன் கதவைத் திறந்தபோது, நாங்கள் அப்போதுதான் விட்டுவிட்டு வந்த பூனை, எங்களைத் தனது சினேகமான மியாவுடன் வாலை விரைத்து வைத்துக்கொண்டு வரவேற்றது. எங்களுக்கு முன்னாலேயே வீட்டுக்கு வந்துவிட்டது. எத்தனை முயற்சித்தும் அந்தப் பூனை அதை எப்படிச் செய்தது என்று தெரியவேயில்லை. நாங்கள் சைக்கிளில்தான் வந்தோம். என் அப்பாவும் ஆச்சரியப்பட்டுப்போனார். சிறிது நேரம் நாங்கள் இரண்டுபேரும் அங்கே பேசாமல்

நின்றிருந்தோம். வெறும் விந்தையைக் காட்டிய என் அப்பாவின் முகத்தில், பெருமை படர்ந்து, இறுதியில் நிம்மதியாக மாறியது. திரும்பவும் அந்தப் பூனை எங்களது செல்லமாக மாறிவிட்டது.

எங்கள் வீட்டில் பூனைகள் இருந்தன. அவற்றை நாங்கள் விரும்பவும் செய்தோம். எனக்கு சகோதரர்களோ சகோதரிகளோ கிடையாது. பூனையுடன் தாழ்வாரத்தில் சூரிய வெளிச்சத்தில் உட்கார்ந்திருப்பதை மிகவும் விரும்பினேன். அப்படியிருக்கும் போது, நாங்கள் ஏன் பூனையை கடற்கரைக்குக் கொண்டுபோய் விட்டுவிட நினைத்தோம்? நான் ஏன் அதை எதிர்க்கவில்லை? இந்தக் கேள்விகளோடு சேர்ந்து அந்தப் பூனை எப்படி எங்களுக்கு முன்னால் வீட்டுக்கு வந்ததென்ற கேள்விக்கும் இன்னும் பதில்களே இல்லை.

எனது தந்தை பற்றிய இன்னொரு நினைவு இது..

தினசரி காலை, காலையுணவுக்கு முன்னால், எங்கள் வீட்டில் உள்ள பூஜை மாடத்துக்கு முன்னர் அமர்ந்து, பவுத்த சூத்திரங்களைக் கண்களை மூடி உச்சாடனம் செய்வார். அது வழக்கமாக வீடுகளிலுள்ள புட்சுடான் அல்லவென்றாலும், அங்கே சிறிய உருண்டையான கண்ணாடிக் குடுவைக்குள் அழகாக செதுக்கப்பட்ட போதிசத்துவரின் உருவம் இருக்கும். அந்தக் கண்ணாடிக் குடுவைக்கு முன்னர் அமர்ந்து - புட்சுடான் முன் அமராமல் - ஒவ்வொரு நாள் காலையும் என் தந்தை ஏன் சூத்திரங்களை உச்சாடனம் செய்தார்? எனது பதிலற்ற கேள்விகள் பட்டியலில் அதுவும் ஒன்று.

எப்படியாக இருப்பினும், ஒவ்வொரு நாளின் தொடக்கத்தைக் குறிப்பதற்கான முக்கியமான சடங்காகவே அவருக்கு இது இருந்தது. அவரது 'கடமை' என்று சொல்லிக்கொண்டதை அவர் செய்வதற்கு ஒருபோதும் தவறியதேயில்லை; அத்துடன் அதில் தலையிட யாரையும் அவர் அனுமதித்ததும் இல்லை. மொத்தச் செயலிலும் தீவிரமான கவனம் இருக்கும். 'தினசரி வழக்கம்' என்று அதை வெறுமனே முத்திரை யிடுவது அதற்கு நியாயம் செய்வதாகாது.

நான் குழந்தையாக இருந்தபோது, யாரிடம் அவர் பிரார்த்திக்கிறார் என்று கேட்டேன். போரில் இறந்தவர்களுக்காகப் பிரார்த்திப்பதாகப் பதிலளித்தார். அவரது ஜப்பானிய ராணுவ சகாக்களுக்காகவும் அவர்களுக்கு எதிரிகளாகயிருந்த சீனப் படை யினருக்காகவும். அவர் அதற்குமேல் பேசவில்லை, நானும் அவருக்கு அதற்குமேல் அழுத்தம் தரவும் இல்லை. நான் கேட்டிருந்தால் அவர் கூடுதலாகத் திறந்திருக்கக் கூடும். ஆனால், நான் கேட்கவில்லை. அந்த விஷயத்தைக் கிளறாததற்கு எதுவோ என்னைத் தடுத்திருக்க வேண்டும்.

எனது தந்தையின் பின்னணி குறித்துச் சிறிது விளக்க வேண்டும். அவரது தந்தையார், பென் சிகி முராகமி, ஆய்ச்சி மாநிலத்தில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். குடும்பத்தில் பிறக்கும் இளைய மகன்களை அனுப்பும் வழக்கப்படி, எனது தாத்தாவும் அருகிலுள்ள ஆலயத்துக்கு பூசாரியாகப் பயிற்சிக்கு அனுப்பப்பட்டார். அவர் நன்றாகப் படிக்கும் மாணவரென்பதால் பல்வேறு கோயில்களில் தன் பயிற்சிகளை முடித்து கியாடோவில் அன்யோஜி கோயிலில் தலைமைப் பூசாரியாக நியமிக்கப்பட்டார். இந்தக் கோயில் சார்ந்து நானூறு அல்லது ஐநூறு குடும்பங்கள் இருந்ததால், அவருக்கு இது பணி அளவில் நல்ல உயர்வுதான்.

நான் ஒசாகா, கோப் பிராந்தியத்தில் வளர்ந்ததால், எனது தாத்தாவின் வீடாக இருந்த இந்த கியோட்டோ கோயிலுக்குப் போவதற்கு அதிகம் வாய்ப்பில்லாத நிலையில் அவரைக் குறித்து மிகச் சில நினைவுகளே இருக்கின்றன. இருப்பினும் குடியில் நாட்டம் கொண்டவரென்று அனைவருக்கும் தெரியும் வண்ணம், சுதந்திரமான சங்கோஜமற்ற நபராகவே, அவரை நான் புரிந்து வைத்திருக்கிறேன். அவரது முதல் பெயரில் உள்ள 'பென்' குறிப்பது போலவே அவர் சரளமாக வார்த்தைகளைக் கையாள்பவர்; திறன் வாய்ந்த பூசாரியாக இருந்ததோடு பிரபலமாகவும் இருந்திருக்கிறார். கம்பீரமான குரலுடன் அனைவரையும் கவர்ந்திழுக்கக் கூடியவராக அவர் இருந்ததை என்னால் நினைவுகூர முடிகிறது.

என் தாத்தாவுக்கு ஆறு மகன்கள் (ஒரு மகள் கூட இல்லை). ஆரோக்கியமாகவும் மனநிறைவோடும் வாழ்ந்தவர். ஆனால், எழுபது வயதில் காலை எட்டு ஐம்பது மணிக்கு, 1958ஆம் ஆண்டு ஆகஸ்ட் 25ஆம் தேதி, கியோடோவையும் ஒட்சுவையும் இணைக்கும் கெய்சின் பாதை தண்டவாளத்தை தாண்டும்போது ரயில் மோதி பலியானார். யமடா-சோவில் உள்ள ஆளற்ற ரயில்வே கிராசிங் அது. இந்தக் குறிப்பிட்ட நாளில்தான் கிங்கி பிராந்தியத்தை மிகப்பெரிய புயலொன்று தாக்கியது. அன்று கனமழை பெய்ததால், என் தாத்தா குடையைக் கொண்டு போயிருந்ததால், அவரால் வளைவில் வந்துகொண்டிருந்த ரயிலைப் பார்க்க முடியாமல் போயிருக்கலாம். அவருக்குக் கொஞ்சம் காதும் கேட்காமலிருந்தது.

தாத்தா இறந்துவிட்டார் என்ற செய்தியை எங்கள் குடும்பம் அன்று இரவு தெரிந்துகொண்டது. என் அப்பா உடனடியாக கியோடோவுக்குப் புறப்பட வேகமாகத் தயாரானார். என் அம்மாவும் அழுதார். என் அப்பாவை கட்டிக்கொண்ட படி, கெஞ்சினார். "கோயில் பொறுப்பை என்ன ஆனாலும் நீங்கள் ஒப்புக்கொள்ளவே கூடாது." அப்போது எனக்கு ஒன்பது வயதுதான். ஆனால், அந்தச் சித்திரம், ஒரு கருப்புவெள்ளை திரைப்படத்தின் காட்சியைப் போல எனது மூளையில் பொறிக்கப்பட்டுள்ளது. எனது தந்தையோ முகத்தில் எந்தச் சலனமுமின்றி அமைதியாகத் தலையை ஆட்டினார். அவர் ஏற்கெனவே தனது மனத்தைத் தயார் செய்துகொண்டிருக்க வேண்டும். அதை என்னால் உணரமுடிந்தது.

எனது தந்தை 1917ஆம் ஆண்டு டிசம்பர் ஒன்றாம் தேதி கியோடாவில் உள்ள அவடா - குச்சியில் பிறந்தார். அவர் சிறுவனாக இருந்தபோது



அமைதியான டைஷோ ஜனநாயக அரசு முடிவுக்கு வந்துகொண்டிருந்தது; அதைத் தொடர்ந்த பொருளாதார மந்த நிலை, அடுத்து மூழ்கடிக்க வந்த இரண்டாம் சீன - ஜப்பானிய யுத்தம், இறுதியாக இரண்டாம் உலக யுத்தத்தின் கொடுமை. போர் முடிந்தவுடன் ஏற்பட்ட குழப்பத்திலும் வறுமையிலும் எனது தந்தையின் தலைமுறையினர் வாழ்வதற்கே போராட வேண்டியிருந்தது.

ஏற்கெனவே நான் சொன்னதுபோல, என் தந்தை ஆறு மகன்களோடு ஒருவராகப் பிறந்தவர். அவர்களில் மூன்று பேர் கட்டாய ராணுவ சேவையில் இரண்டாம் சீன - ஜப்பானியப் போரில் சண்டையிட்டு, அதிசயகரமாக, தீவிரமான காயங்கள் ஏதுமில்லாமல் தப்பினார்கள். ஆறு மகன்களுமே கோயில் குருக்களாக இருப்பதற்கான ஓரளவு தகுதியைப் பெற்றவர்கள். அவர்கள் அந்தவிதமான கல்வியைப் பெற்றிருந்தனர். எனது தந்தை, கோயில் குருவாக உதவிநிலை தகுதியைப் பெற்றிருந்தார். அது ராணுவத்தில் இரண்டாம் நிலைத் தளபதி பதவிக்குக் கிட்டத்தட்ட சமானமானது. கோடைப் பருவத்தில், குடும்ப மூதாதையர்களை கவுரவிக்கும் வருடாந்திரத்திருவிழாக் காலமான ஓபான் பருவத்தில் ஆறு சகோதரர்களும் கியோடாவில் கூடி, கோயில்பற்றைச் சேர்ந்த குடும்பத்தினரின் வீடுகளுக்குத் தனித்தனியாகப் போய்வருவார்கள். இரவில், அவர்கள் ஒன்றாகச் சேர்ந்து மதுவருந்துவார்கள்.

எனது தாத்தா இறந்துபோன பின்னர், கோயிலில் யார் குருக்களின் கடமைகளுக்குப் பொறுப்பேற்பார்கள் என்ற கேள்வி எழுந்தது. பெரும்பாலான மகன்களுக்கு ஏற்கெனவே திருமணமாகி வேலையிலும் இருந்தனர். அத்தனை சீக்கிரமாக திடீரென்று தாத்தா இறந்துபோவார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை.

மூத்த மகனும் எனது பெரியப்பாவுமான ஷிமெ முராகமி, விலங்கு மருத்துவராக விரும்பியவர். ஆனால், போருக்குப் பின்னர் ஓசாகாவில் உள்ள வரி அலுவலகத்தில் வேலையேற்று அப்போது சப்செக்ஷன் தலைவராக ஆகியிருந்தார். என் தந்தையோ கோயோ கருயின் ஜூனியர் அண்ட் சீனியர் உயர்நிலைப் பள்ளியில் படித்து ஜப்பானிய மொழியைக் கற்றுக்கொடுத்தார். மற்ற சகோதரர்கள், ஆசிரியர்களாகவோ, பவுத்தம் சார்ந்த கல்லூரிகளில் படித்துக்கொண்டோ இருந்தனர். சகோதரர்களில் இரண்டுபேர், அப்போதிருந்த வழக்கப்படி பிற குடும்பத்தினரால் தத்தெடுக்கப்பட்டு வளர்க்கப்பட்டனர். அவர்களது குடும்பப் பெயர்களும் வேறு. அவர்கள் கூடிப் பேசியபோது எவரும் எந்த நிலையிலும் கோயில் பொறுப்பை ஏற்பதற்கு தயாராக இல்லை.

ஒரு பெரிய கோயிலொன்றின் தலைமைக் குருவாக ஆவது அத்தனை எளிதான பொறுப்புமில்லை. எவரது குடும்பத்துக்கானாலும் அது பெரிய சுமைதான். அதை சகோதரர்கள் அனைவரும் நன்றாக அறிந்திருந்தனர். விதவையாகி விட்ட என் பாட்டியோ ஒழுங்குகளில் கடுமையானவள்; முட்டாளென்று சொல்ல முடியாது. தலைமைக் குருவின் மனைவியாகச் சேவை செய்யும் சிரமத்தை உணரக்கூடிய ஒரு பெண் அவளிடம் அப்போதும் இருந்தாள். எனது அம்மாவோ ஓசாகாவில் உள்ள சென்பாவில் நன்கு அறியப்பட்ட வர்த்தகக்

குடும்பத்தின் மூத்த மகள். கியோடாவில் உள்ள தலைமைக் குருவுக்கு மனைவியாக இருப்பவளின் தகுதிகள் எதுவுமில்லாத நவீனப் பெண் அவர். கோயில் பொறுப்பை ஏற்கவே கூடாது என்று என் அம்மா, எனது தந்தையாரிடம் கண்ணீருடன் இறைஞ்சியதில் அதிசயம் ஒன்றுமில்லை.

என்னுடைய பார்வையின் அடிப்படையிலிருந்தாவது, நேர்மையும் பொறுப்பும் கொண்ட நபராகவே, எனக்கு என் அப்பா தெரிந்தார். அவர் தனது தந்தையின் வெளிப்படைத் தன்மையைப் பெற்றிருக்காவிடினும் (கொஞ்சம் அதிகப் படபடப்பு கொண்டவர்) அவரது நல்லியல்பும் அவர் பேசும் முறையும் மற்றவர்களை நிம்மதியாக உணரவைப்பதாகும். அவருக்குத் தீவிரமான மதநம்பிக்கையும் இருந்தது. அவர் நல்ல கோயில் குருவாகவும் ஆகியிருக்க முடியும்; அது அவருக்கும் தெரிந்தேயிருக்குமென்று நினைக்கிறேன். அவர் திருமணம் செய்யாமல் இருந்திருந்தால் அந்த யோசனைக்கு அவர் மறுப்பு சொல்லியிருந்திருக்க மாட்டார் என்பதே என் கணிப்பு. ஆனால், தன்னுடைய சிறியக் குடும்பத்தின் விஷயத்தில் சமரசம் கூடாது என்று அவர் எண்ணியிருக்க வேண்டும்.

கடைசியில், எனது பெரியப்பா தனது வரி அலுவலக வேலையை விட்டு, அன்யோஜி ஆலயத்தில் தலைமைக் குருவாக, என் தாத்தா வகித்த பொறுப்பை ஏற்றார். அவருக்குப் பின்னர் அவரது மகனும் எனது ஒன்றுவிட்ட சகோதரனுமான ஜுனிச்சி அந்தப் பொறுப்புக்கு வந்தான். ஜுனிச்சியைப் பொறுத்தவரை, மூத்த மகனாக இருந்த பொறுப்புணர்வின் காரணமாகவே எனது பெரியப்பா தலைமை குருவாவதற்குச் சம்மதித்தாராம். அதைத் தவிர அவருக்கு வேறு வழியும் கிடையாது என்று நான் சொன்னபோது அவன் அதை ஒப்புக்கொண்டான். அந்தக் காலத்தில் கோயில்பற்று கொண்ட குடும்பங்கள் இப்போதுள்ள நிலையைவிட செல்வாக்கு மிகுந்தவர்களாக இருந்தனர். அவர்கள் அவரைத் தப்பிக்க விட்டிருக்கவே மாட்டார்கள்.

என் தந்தை சிறுவனாக இருந்தபோது, நரா பகுதியில் எங்கோவொரு கோயிலில் பயிற்சிக்காக அனுப்பப்பட்டார். அங்குள்ள குருவின் குடும்பத்தாருடன் இருக்கப் பழகிக்கொள்வார் என்ற புரிதலில் அந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்க வேண்டும். அவரது பயிற்சிக்காலம் முடிந்ததும் வீட்டுக்கு திரும்பிவிட்டார். அங்கிருந்த குளிர் அவரது ஆரோக்கியத்தை வெளிப்படையாக பாதித்திருந்ததென்றாலும், அவரால் புதிய சூழ்நிலைக்கு அனுசரித்துச் செல்ல முடியவில்லையென்பதே பிரதான காரணமாகும். வீடு திரும்பிய பின்னர், பெற்றோருக்குப் பிரியமான மகனாகவே இருந்தார். ஆனால், ஒரு ஆழமான உணர்வு வடுவாக அந்த அனுபவம் அவருடனேயே இருந்திருக்கிறதென்றே நான் கருதுகிறேன். அதற்குக் குறிப்பிட்டதொரு சாட்சி என்று எதையும் காண்பிக்க முடியாவிட்டாலும், அவர் தொடர்பான ஏதோவொன்று அப்படி என்னை உணரச் செய்கிறது.

நாங்கள் தொலைத்துவிட்டு வந்த பூனை எங்களை முந்தி வீட்டுக்கு வந்தபோது, முதலில் ஆச்சரியப்பட்டு பின்னர் பெருமிதமாகி கடைசியில் நிம்மதியான என் அப்பாவின் முக வெளிப்பாட்டை இப்போது எண்ணிப் பார்க்கிறேன்.

இதுபோன்ற ஒன்றை நான் ஒருபோதும் அனுபவித்ததேயில்லை. ஒரேயொரு குழந்தை உள்ள குடும்பத்தில் எவ்வளவு தாராளமாக அன்பு கிடைக்குமோ அப்படித்தான் நான் வளர்க்கப்பட்டேன். அதனால், நடைமுறை ரீதியாகவோ உணர்வுரீதியாகவோ ஒரு குழந்தை அதன் பெற்றோர்களால் கைவிடப்படும்போது அது என்ன விதமான உளவியல் வடுக்களுக்குக் காரணமாகும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியாது. என்னால் அதை மேலோட்டமான அளவிலேயே கற்பனை செய்யமுடியும்.

பிரெஞ்சு இயக்குநர் பிரான்ஸிஸ் த்ரூபோ, தனது இளமையில் பெற்றோரிடமிருந்து தனியாக வாழ நிர்ப்பந்திக்கப்பட்டது குறித்துப் பேசியிருக்கிறார். இந்தக் கைவிடப்படுதல் என்னும் கருவை தன் திரைப்படங்களில் தன் வாழ்நாளெல்லாம் கையாண்டு கொண்டே இருந்தார். வார்த்தைகளால் விவரிக்க முடியாத ஆனால், மறக்கவே முடியாத இதுபோன்ற மன அழுத்தம் தரும் சில அனுபவங்கள், பெரும்பாலான பேருக்கு இருக்கிறது.

எனது தந்தை ஹிகாஷியாமா ஜூனியர் உயர் நிலைப்பள்ளியில் 1936இல் படிப்பை நிறைவுசெய்துவிட்டு, 18 வயதில் செய்ஷான் சமய கல்வியைக் கற்றுத்தரும் பள்ளியில் சேர்ந்தார். மாணவர்களுக்கு ராணுவ சேவையிலிருந்து நான்கு ஆண்டுக் கால விலக்கு பொதுவாக உண்டு. ஆனால், அவர் நிர்வாக ரீதியாகச் செய்ய வேண்டிய ஒரு நடைமுறையைச் செய்வதற்கு மறந்துபோனதால் இருபது வயதில் 1938இல் கட்டாய ராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டார். அதுவொரு சிறிய தவறென்றாலும், அப்படி ஒரு தவறு நடந்துவிட்டால் வெறுமனே மன்னிப்புக் கேட்டுவிட்டுத் தப்பித்துக்கொள்ள முடியாது. அதிகார வர்க்கத்திலும் ராணுவத்திலும் அதற்கென பின்பற்ற வேண்டிய நடைமுறைகள் உள்ளன.

என் அப்பா பதினாறாவது டிவிஷனின் 20ஆவது தரைப்படைப் பிரிவிலிருந்தார். பதினாறாவது டிவிஷனுக்குள் நான்கு தரைப்படைப் பிரிவுகள் உண்டு: ஒன்பதாவது தரைப்படைப் பிரிவு (கியோடோ), இருபதாவது தரைப்படைப் பிரிவு (புகுஷியாமா), 33ஆவது தரைப்படைப் பிரிவு (சு நகரம், மி மாநிலம்) மற்றும் 38ஆவது தரைப்படைப் பிரிவு (நரா). ஏன், கியோடா நகரவாசியான எனது தந்தையை உள்ளூர் படைப்பிரிவான ஒன்பதாவது ரெஜிமெண்டில் நியமிக்காமல், தொலைவில் உள்ள புகுஷியாமா ரெஜிமெண்டில் நியமனம் செய்தார்கள் என்று புலப்படவில்லை.

இப்படித்தான் நீண்டகாலமாக நான் கருதிக்கொண்டிருந்தேன். ஆனால், அப்பாவின் பின்னணியை ஆழமாக ஆராய்ந்தபோது அது தவறென்பதைக் கண்டுகொண்டேன். அவர்



இருபதாவது படைப்பிரிவில் கூட இருந்ததில்லை. பதினாறாவது டிவிஷனின் இன்னொரு அங்கமான பதினாறாவது போக்குவரத்துப் பிரிவில் அவர் பணியாற்றியிருக்கிறார். அத்துடன் இப்படைப்பிரிவு புகுஷியாமாவில் இல்லாமல் கியோட்டோ நகரத்தின் புகாகுஷா / புஷிமியில் தலைமையிடத்தைக் கொண்டது. இருபதாவது தரைப்படைப் பிரிவில் என் தந்தை இருந்தார் என்ற பதிவு எனக்கு ஏன் இருந்தது? நான் இந்த விஷயத்தைப் பற்றி பிறகு சொல்கிறேன்.

நான்ஜிங் நகரம் வீழ்ந்த பின்னர் முதலில் நுழைந்ததாக அறியப்பட்ட படைப்பிரிவு இருபதாவது தரைப்படைப் பிரிவாகும். கியோடோவிலிருந்து வந்த ராணுவப் பிரிவினர் அனைவரும் நாகரிகமாக வளர்க்கப்பட்டவர்களாகப் பார்க்கப்பட்டனர். ஆனால், இந்தக் குறிப்பிட்ட படைப்பிரிவினரின் நடவடிக்கைகள் ஆச்சரியப்படுமளவுக்குக் கொடூர நடவடிக்கைகளுக்கு புகழ்பெற்றது. நான்ஜிங் நகரத்தின் மீது நடந்த தாக்குதலில் என் தந்தை பங்குபெற்றிருந்தாரென்று வெகுகாலம் நினைத்திருந்தேன். மேலதிகமாக விவரங்களை துருவித் துலக்குவதற்குத் தயக்கமும் இருந்தது. அவரிடம் நானும் ஒருபோதும் கேட்காமல், அவரும் என்னிடம் சொல்லாமல் 2008ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் 90 வயதான நிலையில் இறந்தார்.

**1938**ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் கட்டாய ராணுவ சேவைக்கு என் தந்தை பணிக்கப்பட்டார். இருபதாம் தரைப்படைப் பிரிவின் பிரபலமான அந்த அணிவகுப்பு அதற்கு முந்தின வருடம் நான்ஜிங்கில் டிசம்பர் மாதம் நடைபெற்றது. என் தந்தை ஒரு வருடத்துக்குப் பின்னரே சேர்ந்துள்ளார். நான் இதைத் தெரிந்துகொண்ட போது, பெரும் சுமை இறக்கப்பட்ட நிம்மதி இருந்தது.

16ஆவது போக்குவரத்து ரெஜிமெண்டின் இரண்டாம் வகுப்பு தனிப்பிரிவில், 1938ஆம் ஆண்டு அக்டோபர் மூன்றாம் தேதி உஜினா துறைமுகத்தில் இதர பட்டாளத்தினருடன் சேர்ந்து ஷாங்காய்க்கு ஆறாம் தேதி வந்துசேர்ந்தார். அங்கே அவரது படைப்பி

ரிவினர் இருபதாவது தரைப்படைப் பிரிவினருடன் சேர்ந்துகொண்டனர். ராணுவத்தின் போர்க்கால டைரக்டரிசொல்வது,பதினாறாவதுபோக்குவரத்துப் படைப்பிரிவின் முதன்மைப் பணி பொருள்களை வழங்குவதும் பாதுகாப்பு வேலையும்தான். படைப்பிரிவினரின் நடமாட்டங்களைத் தொடர்ந்தால், நம்பமுடியாத தொலைவுகளை அவர்கள் கடந்திருப்பதைப் பார்க்க முடியும். மோட்டார் வசதி இல்லாமல், போதுமான எரிபொருள் இல்லாமல், குதிரைகள் மட்டுமே பிரதானப் போக்குவரத்தாக இருந்த நிலையில், அத்தனை தூரப் பயணம் அதீதமானக் கடுமையானதாகவே இருந்திருக்கும்.

போர் முனையில் சூழ்நிலை கொடியது: எந்தப் பொருட்களையும் கொண்டு போகமுடியாது; உணவுக்கும் வெடிமருந்துக்கும் நீடித்த தட்டுப்பாடு இருந்தது. வீரர்களின் சீருடைகள் கந்தலான நிலை யிலிருந்தன. சுகாதாரமற்ற சூழ்நிலைகள் காலரா மற்றும் இதர தொற்றுநோய்கள் பரவுவதற்குக் காரணமாக இருந்தன. தனது வரம்புக்குட்பட்ட சக்திகொண்டு சீனா போன்ற மிகப்பெரிய நாட்டைக் கட்டுப்படுத்த ஜப்பானால் இயலவில்லை. ஜப்பானிய ராணுவத்தால் அடுத்தடுத்த நகரங்களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முடிந்தாலும் நடைமுறை ரீதியாக பார்த்தால் மொத்தப் பிராந்தியங்களையும் ஆக்கிரமிப்பதற்கு முடியாத நிலையே இருந்தது. இருபதாவது படைப்பிரிவைச் சேர்ந்த வீரர்கள் எழுதிய நினைவுக் குறிப்புகள் அந்தச் சூழ்நிலையின் பரிதாபத்தைத் துல்லியமாகத் தருகின்றன. போக்குவரத்துத் துருப்பினர் போர் முன்னணியில் நடக்கும் சண்டையில் ஈடுபடவே யில்லையெனினும் அவர்கள் பாதுகாப்பாக இருந்தார்கள் என்று சொல்லிவிட முடியாது. அவர்கள் குறைந்த அளவே ஆயுதம் வைத்திருந்தவர்கள் (வெறும் துப்பாக்கி முனை ஈட்டி). பின்னாலிருந்து எதிரிகள் தாக்கும்போது அவர்கள் பெரும் சேதத்தை அடைந்தனர்.

செய்ஷான் பள்ளியில் படிக்க ஆரம்பித்த சிறிது காலத்திலேயே, எனது தந்தை ஹைக்கூ எழுதுவதிலுள்ள சந்தோஷங்களை கண்டுபிடித்து ஹைக்கூ வட்டத்தில் இணைந்தார். ஹைக்கூவுக்கு ஒரு நவீன உள்ளடக்கத்தை கொடுப்பதற்கு ஆர்வத்துடன் இருந்திருக்கிறார். அவர் ராணுவ வீரராக இருந்தபோது எழுதிய பல கவிதைகள் பள்ளிக்கூடத்தில் நடத்தப்பட்ட ஹைக்கூ இதழில் வெளியிடப்பட்டன; யுத்தமுனையிலிருந்து பள்ளிக்கு அவர் தபாலில் அனுப்பியிருக்க வேண்டும்.

பறவைகள் இடம்பெயர்கின்றன
ஓ அவை போகும் இடம்
எனது தாயகமாக இருக்கவேண்டும்.

ஒரு ராணுவ வீரன், கோயில் குருவும் தான்
பிரார்த்தனையில் என் கைகளை
இறுக்குகிறான்
நிலவை நோக்கி.

நான் ஹைக்கூ நிபுணன் அல்லவென்பதால் அவரது சாதனை என்னவென்று சொல்வது என்னால் ஆகாதது. இந்தக் கவிதைகளை இணைப்பது தொழில்நுட்பம் அல்ல; அவற்றுக்கு அடியில் உள்ள நேர்மையான உணர்வுகள்தான் என்பது தெளிவு.

கோயில் குரு ஆவதற்காக எனது அப்பா ஆத்மார்த்தமாகப் படித்தார் என்பதில் சந்தேகமே யில்லை. ஆனால், எழுத்துப் பூர்வமாக ஏற்பட்ட எளிய தவறு அவரை ராணுவ வீரர் ஆக்கியது. அவருக்கு டைப் 38 வகை ரைஃபிள் தரப்பட்டு, துருப்புகள் போகும் கப்பலில் கொடூரமான பயிற்சியளிக்கப்பட்டு, அச்சம் அளிக்கும் போர்கள் நடக்கும் முனைக்கு அனுப்பப்பட்டார். அவரது அணி தொடர்ந்து சீனத் துருப்புகளையும், கடுமையான எதிர்ப்பை வழங்கும் கொரில்லாக்களுடனும் மோதி நகர்ந்துகொண்டே யிருந்தது. எப்படி கற்பனை செய்தாலும் கியோடோ மலையில் அமைதியான கோயில் பணி சார்ந்த வாழ்க்கைக்கு நேர் எதிரான வாழ்க்கை இது. அவர் பிரமாண்டமான மனக்குழப்பத்தாலும் ஆன்மிகக் கொந்தளிப்பாலும் பாதிக்கப்பட்டிருக்க வேண்டும். இவையத்தனைக்கும் மத்தியில் ஹைக்கூ எழுதுவது ஒருவேளை அவருக்கு ஒரே ஆறுதலாக இருந்திருக்க வேண்டும். கடிதங்களில் எழுதவே முடியாத விஷயங்களை, அல்லது தணிக்கையை கடக்க முடியாததை, அவர் சங்கேத குறியீட்டில் ஹைக்கூ வடிவத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார். அவரது உண்மையான உணர்வுகளை அங்கேதான் அவர் வெளிப்படுத்த முடிந்திருக்கிறது.

எனது தந்தை போரைப் பற்றி ஒரேயொரு முறைதான் பேசியிருக்கிறார். பிடிக்கப்பட்ட சீனப் படை வீரனுக்கு அவரது அணியினர் மரண தண்டனை அளித்ததைப் பற்றிய கதை அது. அதை என்னிடம் சொல்லத் தூண்டியது ஏதுவென்று எனக்குத் தெரியாது. ஒரு தனித்துவிடப்பட்ட நினைவாக ரொம்ப காலத்துக்கு முன்பு நடந்த ஒன்றென்பதால் பின்னணி தெளிவாகத் தெரியவில்லை. நடுநிலைப் பள்ளியில் நான் கீழ் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். அந்த மரண தண்டனை எப்படி அளிக்கப்பட்டது என்று தற்செயலாக விவரிக்க ஆரம்பித்தார்.

சீன ராணுவ வீரருக்குத் தான் கொல்லப்பட போகிறோம் என்று தெரிந்திருந்தாலும் அவர் போராடவோ அச்சத்தைக் காண்பிக்கவோ இல்லை. அவர் கண்களை மூடியபடி அமைதியாக அமர்ந்திருக்கிறார். அத்துடன் அவர் தலை துண்டிக்கப்பட்டுள்ளது. அந்த மனிதனின் நடத்தை ஆச்சரியமானதென்று என் தந்தை சொன்னார். அந்தச் சீனப் படைவீரனிடம் அப்பாவுக்கு ஆழமான மரியாதையுணர்வு தெரிந்தது. அவரது அணியில் உள்ள மற்ற வீரர்களுடன் அவரும் சேர்ந்து இந்த மரண தண்டனை நிகழ்வை பார்த்தாரா அல்லது நேரடியாக ஈடுபடுவதற்கு அவர் தள்ளப்பட்டாரா என்று எனக்கு தெரியவில்லை. எனது நினைவு மங்கலாக இருப்பதால் அதை எப்படியானதென்று நிர்ணயிக்க முடியவில்லை. எனது தந்தை அந்தச் சம்பவத்தை வேண்டுமென்றே குழப்பமான முறையில் விளக்கினாரா என்றும் சொல்லத் தெரியவில்லை. ஒன்று மட்டும் வெளிப்படையானது.




ராணுவ வீரராக மாறிய இந்த கோயில் குருவின் ஆன்மாவில் நெடுங்காலமாக வேதனையையும் தொந்தரவையும் இந்த அனுபவம் விட்டுச் சென்றிருக்க வேண்டும்.

புதிய படை வீரர்களுக்கும் அப்போதுதான் பணியமர்த்தப்பட்டவர்களுக்கும், பிடிக்கப்பட்ட சீன வீரர்களுக்குத் தண்டனையளிக்கும் கொலைப் பயிற்சியைத் தருவது அப்போது வழக்கமாகவே இருந்துள்ளது. நிராயுதபாணியான கைதிகளைக் கொல்வது சர்வதேச விதிமுறை மீறல்தானென்றாலும், ஜப்பானியப் படையினர் அதை சர்வசாதாரணமாகச் செய்தே வந்தனர். ராணுவ யூனிட்களிடம் கைதிகளைப் பராமரிப்பதற்கான வளங்களும் இல்லை. இவற்றில் பெரும்பாலானவை துப்பாக்கியால் சுடப்பட்டோ, துப்பாக்கி முனை ஈட்டியால் குத்தப்பட்டோ நிறைவேற்றப்பட்டன. என் தந்தை சொன்ன இந்தக் குறிப்பிட்ட சம்பவத்தில் தண்டனை தருவதற்கு வாள் பயன்படுத்தப்பட்டது.

என் தந்தை சொன்ன, வாளால் தலை வெட்டப்பட்ட, ஈரக்குலையை நடுங்கவைக்கும் இந்தக் கதை எனது இளம் மனத்தில் ஆழமாகப் பதிந்ததென்று நான் சொல்லத் தேவையில்லை. இன்னொரு வகையில் சொல்லப்போனால், என் தந்தை சுமந்த கனத்த சுமையான ஒரு துயரத்தின் ஒருபகுதி, அவரது மகனுக்குக் கையளிக்கப்பட்டுவிட்டது. அப்படித்தான் மனிதத் தொடர்புகள் வேலை செய்கின்றன, அப்படித்தான் வரலாறு செயல்படுகிறது. அது ஒருவகையான உணர்வு மாற்றீடு மற்றும் சடங்கு ஆகும். எனது அப்பா தனது போர்க் கால அனுபவங்கள் பற்றி ஒரு வார்த்தைகூட சொன்னதில்லை. இந்த தண்டனை குறித்து நினைவுகூர்ந்து என்னிடம் பேசியது ஆச்சரியமானதுதான். இரண்டு பேருக்கும் பொதுவான ஆறாத வடுவாக இருக்கப் போகிறதென்றாலும், அவரது சதையும் ரத்தமுமான மகனுக்கு இந்த கதையைத் தொடர்புறுத்துவதற்கான கட்டாயத்தை அவர் உணர்ந்திருக்க வேண்டும்.

என் தந்தை பணியாற்றிய யுனிட்டுடன் சேர்ந்து இருபதாம் தரைப் படைப்பிரிவு ஜப்பானுக்கு 1939ஆம் ஆண்டு ஆகஸ்ட் இருபதாம் தேதி வந்து சேர்ந்தது. ஒரு வருடம் படைவீரராக இருந்துவிட்டு என் அப்பா செய்ஷான் பள்ளியில் தனது படிப்பைத் தொடர்ந்தார். அந்தச் சமயத்தில் கட்டாய ராணுவ சேவை இரண்டு ஆண்டுகள். ஆனால், என் தந்தையோ ஒரேயொரு வருடம்தான் சேவை செய்தார். ஒருவேளை அவர் மாணவராக இருந்தபோது ராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டதைக் கணக்கில் எடுத்திருக்கவேண்டும்.

ராணுவ சேவைக்குப் பின்னர், எனது தந்தை ஹைக்கூ எழுதுவதை உற்சாகமாகத் தொடர்ந்தார். இந்தக் கவிதை 1940ஆம் ஆண்டில் ஜப்பானுக்கு நல்லெண்ணப் பயணமாக வந்த ஹிட்லர் யூத் இயக்கத்தினரின் வருகையால் தாக்கமுற்றதாக இருக்க வேண்டும்.

மானை அருகே வரவைப்பதற்காக
அவர்கள் கூவினர், பாடினர்
ஹிட்லர் யூத்.

*தனிப்பட்ட வகையில், நான் இந்த ஹைக்கூவை மிகவும் விரும்புகிறேன். வரலாற்றின் அரூபமான தருணத்தைநுட்பமாகவும் அசாதாரணமான வழியிலும் இக்கவிதை பிடிக்கிறது. வெகுதூரத்தில் ஐரோப்பாவில் நடந்துகொண்டிருக்கும் கோரமான யுத்த மோதலுக்கும் மானுக்குமிடையிலான முரண் காண்பிக்கப்படுகிறது. நரா பூங்காவில் உள்ள மானாக இருக்கலாம். தங்களது குறுகிய ஜப்பானிய பயணத்தில் மகிழ்ந்து களித்த ஹிட்லர் யூத்கள், கிழக்கு முனையில் மோசமான குளிரில் அழிந்து போயிருக்க வாய்ப்புள்ளவர்கள்தான்.*

*இந்தக் கவிதையும் என்னை கவர்ந்தது:*

இஸ்ஸாவின் மரண நாள்
நான் அவரது துக்கமான கவிதைகளுடன்
இங்கே உட்கார்ந்திருக்கிறேன்.

*உலகம் மிகுந்த அமைதி, சாந்தத்தோடு சித்தரிக்கப்படுகிறது. இருப்பினும் குழப்படி உணர்வு மிச்சமுள்ளது.*

*என் அப்பா இலக்கியத்தை எப்போதும் நேசிப்பவராக இருந்தார். அவர் ஆசிரியரான பின்னர் பெரும்பாலான நேரத்தை வாசிப்பில் செலவிட்டார். எங்கள் வீடெங்கும் புத்தகங்கள் நிறைந்திருந்தன. அது எனது வளரிளம் பருவத்தில், வாசிப்புக்கான தாக்கத்தை எனக்குள் ஏற்படுத்தியிருக்கலாம்.*

*செய்ஷான் பள்ளியில் எனது தந்தை ஹானர்ஸுடன் கூடிய பட்டம் பெற்றார். 1941ஆம் ஆண்டு மார்ச் மாதம் கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் இலக்கியத் துறையில் சேர்ந்தார். பவுத்த சமயக் கல்வியை முடித்த ஒருவர், சிறந்த கல்வி நிறுவனமான கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகம் நடத்தும் நுழைவுத் தேர்வில் தேர்வது அத்தனை சுலபமல்ல. "உன் அப்பா மிகப்பெரிய அறிவாளி" என்று என் அம்மா அடிக்கடி சொல்வார். அவரது அறிவுத்திறன் குறித்து எனக்கு பெரிதாகத் தெரியாது. வெளிப்படையாகச் சொல்லப் போனால் அது எனக்குப் பெரிய விஷயமாகத் தெரியவில்லை. என் போன்ற பணியில் ஈடுபடுபவருக்கு கூர்மையான உள்ளுணர்வை விட அறிவுத்திறன் என்பது குறைந்த முக்கியத்துவம் கொண்டதே. அப்படியே இருப்பினும் எனது தந்தை பள்ளித் தேர்வுகள் அனைத்திலும் சிறப்பான மதிப்பெண்கள் எடுத்துத் தேறியவர் என்பது கண்கூடு.*

*அவரை ஒப்பிடுகையில், எனக்கு படிப்பில் அதிக விருப்பம் இருந்ததேயில்லை; எனது மதிப்பெண்கள் தொடக்கத்திலிருந்து முடிவு வரைக்கும் சுமார்தான். நான் விரும்பும் விஷயங்களை மட்டுமே தொடரும் இயல்பு கொண்டவன் என்பதால் வேறெதைக் குறித்தும் அதிகம் கவலைப்பட்டதேயில்லை. நான் மாணவனாக இருந்தபோதும் இப்போதும் அதுதான் நிஜம்.*

*இது எனது அப்பாவை ஏமாற்றமடைய செய்தது. அந்த வயதிலிருந்த தன்னை என்னுடன் அவர் உறுதியாக ஒப்பிட்டு பார்த்திருப்பார். ஒரு அமைதியான காலத்தில் நீ பிறந்திருக்கிறாய் என்று அவர் நிச்சயமாக நினைத்திருப்பார். நீ விரும்பிய மாதிரி படிப்பதற்கு உனக்கு எந்த தடையும் கிடையாது; அப்படியிருந்தும் ஏன் கூடுதலாக முயற்சி செய்வதில்லை? போர் காரணமாக அவர் தொடராமல் விட்ட பாதையை நான் தொடரவேண்டுமென்று விரும்பியிருக்கலாம்.*

*ஆனால், அப்பாவின் எதிர்பார்ப்புகளுக்கேற்ப என்னால் இருக்க முடியவில்லை. நான் என்ன படிக்கவேண்டுமென்று நினைத்தாரோ அதில் நான் ஈடுபடவேயில்லை. பள்ளியில் பெரும்பாலான வகுப்புகள் மனத்தை மரத்துப்போகச் செய்வதாகவும், பள்ளி என்ற அமைப்பே அனைவரையும் அதீதமாகத் தட்டையாக்கி ஒடுக்குவதாகவும் நினைத்தேன். இதனால் என் தந்தை நீடித்த நிராசை உணர்வுக்கு ஆளானார், நான் நீடித்த தொந்தரவுணர்வு கொண்டவனானேன். குருட்டுக் கோபமாகவும் கொந்தளித்தபடி இருந்தது. முப்பது வயதில் ஒரு நாவலாசிரியனாக இலக்கிய உலகில் அறிமுகமானபோது, என் தந்தை உண்மையிலேயே மகிழ்ச்சியுற்றார். ஆனால், அதற்குள் எங்கள் உறவு மிகுந்த இடைவெளிக்கும் இறுக்கத்துக்கும் உள்ளாகியிருந்தது.*

*இப்போதும் என்னுடன் அந்த உணர்வைச் சுமக்கிறேன் - அல்லது ஒருவேளை அந்த உணர்வின் வண்டலாக இருக்கலாம் - என் தந்தையை ஏமாற்றிவிட்ட தவிக்கவிட்ட உணர்வு அது. எனது வளரிளம் பருவத்தில், வீட்டை அசௌகரியமாக்கிய விஷயம் அது. எனது தொடர்பிலான குற்றவுணர்வு அடியோட்டமாக இருந்துள்ளது. பள்ளியில் நடக்கும் தேர்வில் ஒரு கேள்விக்குக் கூட விடை தெரியாமல் உட்கார்ந்திருக்கும் துர்கனவுகள் இப்போதும் வருகின்றன. பரிட்சையில் தோல்வியடைவது பெரிய பின்விளைவுகளை ஏற்படுத்துமென்று தெரிந்தும் நான் ஒன்றுமே செய்யாமல் அமர்ந்திருக்கக் கடிகார முள் கடந்துகொண்டேயிருக்கிறது. அந்தவகையான கனவு வரும்போது, நான் வேர்க்க விறுவிறுக்க எழுந்துகொள்வேன்.*

*ஆனாலும் எனக்குப் பிடித்த புத்தகங்களை வாசிப்பது, நான் விரும்பிய இசையைக் கேட்பது, நண்பர்களுடன் விளையாடுவது, தோழிகளுடன் டேட்டிங் செல்வது ஆகியவைதான் மேஜையில் அமர்ந்து வீட்டுப் பாடத்தை முடித்துத் தேர்வுகளில் நல்ல மதிப்பெண்களை வாங்குவதை விடவும் விருப்பமாக இருக்கிறது.*

*நாம் வாழும் காலத்தின் காற்றை சுவாசிப்பது மட்டுமே நம்மால் செய்யமுடிவது, அந்தக் காலகட்டத்தின் பிரத்யேகச் சுமைகளை நம்மோடு சுமந்தபடி, அதன் வரம்புகளோடுதான் வளர்கிறோம். அவை அப்படித்தான்.*

*எனது தந்தை செய்ஷான் பள்ளியில் தனது படிப்பை இலையுதிர் காலத்தில் 1941ஆம் ஆண்டு முடித்தார். செப்டம்பர் மாத இறுதியில் அவருக்குக் கட்டாய ராணுவ சேவை அழைப்பு வந்தது. அக்டோபர் மூன்றாம் தேதி, அவர் மீண்டும் ராணுவ வேலைக்குத் திரும்பி முதலில் இருபதாவது தரைப்படைப் பிரிவிலும்*

பின்னர் 53ஆவது போக்குவரத்துப் பிரிவிலும் பணியாற்றினார்.

1940இல் மஞ்சூரியாவில் நிரந்தரமாக பதினாறாவது டிவிஷன் ராணுவம் தங்க வைக்கப்பட்டிருந்தது. அது அங்கே இருந்தபோதுதான் கியோடாவில் 53ஆவது டிவிஷன் பிரிவு ஒருங்கிணைக்கப்பட்டது. புகுஷியாமா ரெஜிமெண்டில் துவக்கத்தில் என் அப்பா அமர்த்தப்பட்டதற்கு இந்தத் திடீர் ஒருங்கிணைப்பினால் ஏற்பட்ட குழப்பம் காரணமாக இருந்திருக்கலாம்.(அவர் கட்டாய ராணுவ சேவைக்கு முதல்முறை சென்றதிலிருந்தே புகுஷியாமாவில்தான் அமர்த்தப்பட்டிருந்தார் என்று நான் ஏற்கெனவே சொன்னதுபோல் தவறாக நினைத்திருந்தேன்.) 53ஆவது பிரிவினர் 1944ஆம் ஆண்டு பர்மாவுக்கு அனுப்பப்பட்டு இம்பால் போரில் பங்கேற்றதோடு, டிசம்பர் தொடங்கி 1945ஆம் ஆண்டு மார்ச் வரை ஐராவதி நதிப் போரில் பிரிட்டிஷ் படையால் கிட்டத்தட்ட அழிக்கப்பட்டது.

ஆனால், 1941ஆம் ஆண்டு நவம்பர் 30ஆம் தேதி, எதிர்பாராத விதமாக எனது தந்தை ராணுவ சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டு அன்றாட வாழ்க்கைக்குத் திரும்ப அனுமதிக்கப்பட்டார். பேர்ல் ஹார்பர் தாக்குதலுக்கு எட்டு நாட்கள் இருந்தன. அந்தத் தாக்குதல் நடந்த பிறகு ராணுவம் என் அப்பாவிடம் இத்தனை பெருந்தன்மையுடன் இருந்திருக்குமா என்ற சந்தேகம் உள்ளது.

என் அப்பா சொன்னதுபோல,அவரது வாழ்க்கை ஒரு அதிகாரியால் காப்பாற்றப்பட்டது."நீ கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் படிக்கிறாய். ஒரு ராணுவ வீரனாக இருப்பதை விட, உனது கல்வியைத் தொடர்வதன் மூலம் நாட்டுக்கு மேலான சேவையைச் செய்யமுடியும்." என்று அந்த அதிகாரி கூறியுள்ளார். ஒரு அதிகாரிக்கு அப்படிப்பட்ட முடிவெடுக்கும் அதிகாரம் இருந்திருக்குமா? எனக்கு தெரியவில்லை. மனிதவியல் படிப்பு படிக்கும் என் அப்பாவைப் போன்ற ஒரு மாணவர் நாட்டுக்குச் சேவை செய்துவிட்டு கல்லூரிக்குத் திரும்புவதும் ஹைக்கூவைத் தொடர்வதையும் ஏற்றுக்கொள்வது கடினம்தான். வேறு காரணிகளும் இதில் செயல்பட்டிருக்கலாம். ஆனால், அவர் ராணுவத்திலிருந்து விடுவிக்கப்பட்டு மீண்டும் சுதந்திர மனிதர் ஆனது உண்மை.

நான் கேட்ட கதை இதுதான். அல்லது அப்படி குழந்தையாக இருந்தபோது கேட்ட நினைவு இருக்கிறது. துரதிர்ஷ்டவசமாக உண்மை விவரங்களுடன் அது பொருந்திப் போகவில்லை. கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழக ஆவணங்களின்படி 1944ஆம் ஆண்டு அக்டோபரில் இலக்கியத் துறையில் என் அப்பா சேர்ந்திருக்கிறார். ஒருவேளை என்னுடைய நினைவு மூட்டமாக இருக்கலாம். அல்லது என் அம்மா இந்தக் கதையைத் தவறிய நினைவிலிருந்து சொல்லியிருக்கலாம். அத்துடன் தற்போது அது சரியா இல்லையா என்பதைச் சரிபார்ப்பதற்கு ஒருவழியும் இல்லை.

ஆவணங்களின்படி என் அப்பா கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் 1944ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் இலக்கியத் துறையில் சேர்ந்து 1947ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பட்டம் பெற்றிருக்கிறார். ஆனால், ராணுவ சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டு கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்துக்குள் நுழையும் வரை, 23 வயது முதல் 26 வயது வரை எங்கே இருந்தார் என்ன செய்தார் என்று எனக்குத் தெரியவேயில்லை.

எனது தந்தை ராணுவ சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டவுடன் இரண்டாம் உலகப் போர் பசிபிக் பிராந்தியத்தில் தொடங்கிவிட்டது. அதன்போக்கில், 16ஆவது பிரிவும் 53ஆவது பிரிவும் முழுமையாக அழித்தொழிக்கப்பட்டது. என் தந்தை விடுவிக்கப்படாமல் இருந்திருப்பின், அவர் அழைத்துச் செல்லப்பட்டு, அவர் வேலைபார்த்த யூனிட்களில் சேர்க்கப்பட்டு, போர்க்களத்தில் இறந்துபோயிருப்பார்; நான் இருந்திருக்கவே முடியாது. அதை அதிர்ஷ்டமென்றும் சொல்லலாம். ஆனால், தனது உயிர் காப்பாற்றப்பட்டு, அவரது முன்னாள் சகாக்கள் தங்கள் உயிரை இழந்தது பெரிய வலியையும் துயரையும் கொடுப்பது. தனது வாழ்க்கை முழுவதும் அன்றாடம் காலையில் அத்தனை பக்தியுடன் சூத்திரங்களை உச்சரித்தபடி கண்களை மூடிப் பிரார்த்தித்ததை என்னால் இப்போது புரிந்துகொள்ள முடிகிறது.

1945ஆம் ஆண்டு ஜூன் மாதம் 12ஆம் தேதி கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் நுழைந்தபிறகு எனது தந்தை மூன்றாவது முறையாக கட்டாய ராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டார். சுபு 143 கார்ப்ஸ்ஸில் பணியமர்த்தப்பட்டார். இந்தப் பிரிவு எங்கே நிலைகொண்டிருந்ததென்று தெளிவாக தெரியவில்லை. ஆனால், ஜப்பானுக்குள்தான் இருந்தது. இரண்டு மாதங்கள் கழித்து ஆகஸ்ட் 15ஆம் நாள் போர் முடிந்தபிறகு, அக்டோபர் 28இல் எனது தந்தை சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டு பல்கலைக்கழகம் திரும்பினார். அவருக்கு அப்போது 27 வயது.

1947ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் எனது அப்பா தேர்வுகளில் வெற்றி பெற்று தனது பி.ஏ. பட்டத்தைப் பெற்றார். கியோடோ இம்பீரியல் பல்கலைக்கழகத்தில் கிராஜூவேட்ப்ரோக்ராமில் சேர்ந்துஇலக்கிய படிப்பைத் தொடர்ந்தார். நான் 1949ஆம் ஆண்டு ஜனவரியில் பிறந்தேன். அவரது வயது காரணமாகவும் திருமணமாகி குழந்தையும் இருந்ததால் தன் படிப்பை முடிக்காமல் நிறுத்த வேண்டியதாகிவிட்டது. வாழ்வாதாரத்துக்காக நிஷிநோமியாவில் உள்ள கோயோ ககுயினில் ஜப்பானிய ஆசிரியர் பொறுப்பை ஏற்றார்.

என் அப்பாவும் அம்மாவும் திருமணம் செய்தது தொடர்பான விவரங்கள் எனக்குத் தெரியவில்லை. ஒருவர் கியோடோவிலும் இன்னொருவர் ஒசாகாவிலும் தூரமாக வாழ்ந்த நிலையில் பரஸ்பரம் தெரிந்தவர்கள் வழியாகவே அறிமுகமாகியிருக்க வேண்டும். என் தாய் இசை ஆசிரியராக இருந்த இன்னொருவரை மணப்பதற்கு இருந்தவர். ஆனால், அவர் போரில் இறந்துவிட்டார். ஒசாகாவில் உள்ள சென்பாவில் என் அம்மாவின் தந்தை வைத்திருந்த கடை, அமெரிக்க குண்டுவெடிப்பில் எரிந்து சாம்பலானது.சண்டை விமானங்கள் நகரத்தையே தாக்கி நிர்மூலமாக்கியதையும் உயிரைக் காப்பாற்றுவதற்காக

ஒசாகாவின் தெருக்களில் ஓடியதையும் அவர் நினைவில் வைத்திருந்தார். போர் என் அம்மாவின் வாழ்க்கையிலும் வெளிப்படையான தாக்கத்தை ஏற்படுத்தியிருந்தது.

தற்போது 96 வயதாகும் எனது அம்மாவும் ஜப்பானிய ஆசிரியராக இருந்தார். ஒசாகாவில் உள்ள ஷியோன் பெண்கள் பள்ளியில் இலக்கியத் துறையில் பட்டப்படிப்பு முடித்தபிறகு, தான் படித்த இடத்திலேயே ஆசிரியராகப் பணிபுரிந்தாள். ஆனால், திருமணத்துக்காக அவர் தனது வேலையை விடவேண்டி வந்தது.

எனது அம்மாவின் பார்வையில் என் அப்பா தனது வாலிப நாட்களைத் தாறுமாறாகவே வாழ்ந்துள்ளார். அவரது போர்க்கால அனுபவங்கள் துள்ளத்துடிக்க அவரைத் துரத்தியிருக்கின்றன. அத்துடன் அவர் விரும்பியது போல வாழ்க்கை அமையாமல் கடினமானது குறித்த விரக்தியும் இருந்துள்ளது. நிறையக் குடித்ததோடு அவ்வப்போது மாணவர்களைத் தாக்கிவிடுவது உண்டாம். ஆனால், சிறிது காலத்திலேயே நான் வளரும் நிலையில் குறிப்பிடத்தகுந்த அளவு மிருதுவாகி விட்டார். அவர் மன அழுத்தமாகி சில சமயங்களில் அதிகம் குடிப்பதும் உண்டு. ஆனால், எங்கள் வீட்டில் மோசமான சம்பவங்கள் எதையும் அனுபவித்தாக நினைவுகூர என்னால் முடியவில்லை.

பாரபட்சமின்றி பேசினால், என் தந்தை ஒரு சிறந்த ஆசிரியரென்றே நினைக்கிறேன். அவர் இறந்தபோது, அவரது முன்னாள் மாணவர்கள் அத்தனை பேர் இறுதி மரியாதை செலுத்த வந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். அவர் மீது அவர்களுக்கு அந்தளவு பிரியம் இருந்தது. அவர்களில் நிறைய பேர் மருத்துவர்களாக ஆனார்கள். அத்துடன் என் அப்பா புற்றுநோய் மற்றும் நீரிழிவுடன் போராடிய போது அவரை நன்கு கவனித்தும் கொண்டனர்.

என் அம்மாவும் அவரது அளவில் மிகச் சிறந்த ஆசிரியர்தான். என்னைப் பெற்று முழுநேரமாக இல்லத்தரசியான பின்னரும்கூட அவரது முன்னாள் மாணவர்கள் வீட்டுக்கு வருவதைப் பார்த்திருக்கிறேன். ஏதோவொரு காரணத்தால் நான் ஆசிரியராக ஆகவேண்டுமென்று உணர்ந்ததேயில்லை.

நான் வளர்ந்து என்னுடைய ஆளுமையை உருவாக்கிய பின்னர், எனக்கும் என் தந்தைக்கு மிடையிலான உளவியல் பிரச்சினை மேலும் வெளிப்படையானது. நாங்கள் இருவருமே வளைந்து கொடுக்கவில்லை. அத்துடன் எங்கள் எண்ணங்களை வெளிப்படையாகச் சொல்லாத வகையில் நாங்கள் ஒரேமாதிரி.

எனக்குத் திருமணமான பிறகு நான் வேலை செய்ய ஆரம்பித்தேன். எனது தந்தையும் நானும் மேலும் தனிமைப்பட்டுப் போனோம். அத்துடன் முழுநேர எழுத்தாளனாக நான் ஆனபோது எங்கள் உறவு மேலும் திருகி முடிவில் எல்லா தொடர்புகளையும் துண்டிக்கும் நிலை ஏற்பட்டது. நாங்கள் ஒருவரையொருவர் இருபது ஆண்டுகளுக்கு




மேலாகப் பார்க்காததோடு பரிபூரணத் தேவை இருந்தாலொழிய பேசுவதேயில்லை என்ற நிலை ஏற்பட்டது.

நானும் எனது தந்தையும் வேறு வேறு காலங்களில் சூழ்நிலைகளில் பிறந்தவர்கள். அத்துடன் நாங்கள் சிந்திக்கும் உலகை பார்க்கும் வழிகளும் பரஸ்பரம் தொடர்பே இல்லாதது. ஒரு குறிப்பிட்ட புள்ளியில் எங்கள் உறவை நான் மறுகட்டுமானம் செய்ய முயலும்போது அது எதிர்பாராத திசைக்குப் போய்விடும். ஆனால், நான் என்ன செய்வதற்கு விரும்பினேனோ அதில் மிகுந்த கவனத்துடன் இருந்ததால் அதற்கான முயற்சியில் தொடர்ந்து ஈடுபடவில்லை.

எனது அப்பாவும் நானும், அவர் இறந்துபோவதற்கு சற்றுமுன்னர்தான் நேருக்கு நேராகக் கடைசியாகப் பேசினோம். கியோடோவில் நிஷ்ஜினில் உள்ள மருத்துவமனையில் அவர் சேர்க்கப்பட்டிருந்தார். அவருக்குத் தீவிரமான நீரிழிவும் புற்றுநோயும் கண்டு அவரது உடலைப் பெருமளவு சேதப்படுத்தியிருந்தது. குண்டாகவே நான் பார்த்த அவர் வாடி மெலிந்து போயிருந்தார். என்னால் அவரை அடையாளம் காணக்கூட முடியவில்லை. அவரது வாழ்க்கையின் கடைசி சில நாட்களில் ஒரு அசந்தர்ப்பமான உரையாடலை நடத்தி ஒருவகையாகச் சமாதானத்துக்கும் வந்தோம். எங்களது வித்தியாசங்களுக்கு அப்பால், எங்களைப் பிணைக்கும்

சரடை நலிவடைந்த எனது தந்தையில் உணர்ந்தேன்.

கொரோரயினில் உள்ள கடற்கரைக்கு, ஒரு வரிப்பூனையைத் தொலைப்பதற்காக அப்பாவின் சைக்கிளில் சேர்ந்து போய் பகிர்ந்துகொண்ட விந்தையான அந்தக் கோடை நாளை மறுபடி வாழ்ந்து பார்க்கிறேன். எங்களின் சிறந்ததை அந்தப் பூனை எடுத்துக்கொண்டு விட்டது. கடல் அலைகளின் சத்தத்தை என்னால் கேட்க முடிகிறது. காற்றின் வாசமும் பைன் மரங்களின் வழியாக அதன் சீழ்க்கையையும் உணரமுடிகிறது. இதுபோன்ற முக்கியத்துவமற்ற விஷயங்களின் சேர்க்கைதான் நானாக இருக்கும் இப்போதைய நபரை உருவாக்கியிருக்கிறது.

குழந்தைப் பருவத்திலிருந்து பூனையுடன் தொடர்புடைய இன்னொரு நினைவு எனக்கு உள்ளது. எனது நாவல்களில் ஒன்றில் இந்தப் பகுதியை சேர்த்திருக்கிறேன் என்றாலும் அதை எப்படி நடந்ததோ அப்படியே இங்கு மீண்டும் தொடுவதற்கு விரும்புகிறேன்.

எங்களிடம் வெள்ளை நிறத்தில் ஒரு குட்டிப்பூனை இருந்தது. அது எப்படி எங்களிடம் வந்ததென்று நினைவில்லை. அப்போதிலிருந்து எங்கள் வீட்டுக்குப் பூனைகள் வருவதும் போவதுமாக இருந்துள்ளன. ஆனால், இந்தக் குட்டிப்பூனையின் ரோம மிருதுவும் அழகும் எனக்கு இன்னும் நினைவில் உள்ளது.

ஒரு நாள் மாலை, தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்த போது, இந்தப் பூனை திடீரென்று, எங்கள் தோட்டத் திலிருந்த உயரமான அழகிய பைன் மரத்தின் மீது வேகமாக ஏறிப்போனது. தனது தைரியத்தையும் உறுதியையும் என்னிடம் காட்டுவதற்காகப் போனது போலும். அது மரத்தின் நடுத்தண்டின் மீது தவழ்ந்தேறி, மேல் கிளைகளில் மறைந்த வேகத்தை என்னால் நம்பவே முடியவில்லை. கொஞ்ச நேரம் கழித்து அந்தப் பூனை பரிதாபகரமாக, உதவி கேட்டு இறைஞ் சுவது போல மியாவ் என்று சத்தமிட்டது. அத்தனை உயரத்துக்கு ஏறும்போது அதற்கு எந்தச் சிரமமும் இல்லை. ஆனால், திரும்பக் கீழே இறங்கிவருவதற்கு அஞ்சியது போலத் தோன்றியது.

நான் மரத்தின் அடியிலிருந்து மேலே பார்த்தேன். என்னால் பூனையைப் பார்க்கவே முடியவில்லை. அதன் தீனமான அழுகை மட்டும் கேட்கிறது. குட்டிப்பூனையைக் காப்பாற்ற ஏதேனும் வழியை முயலக்கூடுமென்பதால் என் அப்பாவிடம் சென்று நடந்ததைச் சொன்னேன். ஆனால், அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. எத்தனை பெரிய ஏணியை இட்டாலும் பயனில்லாத உயரம் அது. பூனை உதவி கேட்டு மியாவ் மியாவ் என்று இரைந்துகொண்டே இருந்தது. சூரியன் அஸ்தமிக்கத் தொடங்கி இருள் பைன் மரத்தை மூடியது.

அந்தக் குட்டிப்பூனைக்கு என்ன நடந்ததென்று தெரியவில்லை. அடுத்த நாள் காலை நான் எழுந்தபோது பூனையின் கதறலை நான் கேட்கவில்லை. மரத்தின் அடியில் நின்று அந்தப் பூனையின் பெயரைக் கூப்பிட்டும் பதில் வரவேயில்லை. வெறும் அமைதி.

இரவில் ஏதாவது ஒருவேளையில் அந்தப் பூனை இறங்கி எங்கேயாவது போயிருக்கலாம் (ஆனால், எங்கே?). அல்லது, அதனால் இறங்கமுடியாமல், கிளைகளைப் பற்றிப் பிடித்தபடி சோர்ந்து பலவீனமாகிப் போய் இறந்திருக்கலாம். நான் அங்கேயே தாழ்வாரத்தில் அமர்ந்து இந்தக் காட்சிகளை ஓடவிட்டபடியே மரத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். அருமையான உயிரை குட்டிக் கால் நகங்களால் பிடித்தபடி, அந்த வெள்ளைக் குட்டிப்பூனை போராடுவதையும் பின்னர் வற்றி உலர்ந்து இறந்துபோவதையும் எண்ணிப் பார்த்தேன்.

அந்த அனுபவம் தீர்க்கமான ஒரு பாடத்தைக் கற்றுக்கொடுத்தது: கீழே இறங்குவதென்பது மேலே போவதை விடக் கடினமானது. இதிலிருந்து பொதுமைப்படுத்தினால், விளைவுகள் காரணங்களை மிஞ்சக்கூடியவை; அத்துடன் மட்டுப்படுத்துவதும்கூட. இந்த முறைப்பாட்டின்படி சில சந்தர்ப்பங்களில் ஒரு பூனை கொல்லப்படுகிறது; பிற சந்தர்ப்பங்களில் ஒரு மனித உயிர்.

எப்படியாயினும், நான் ஒன்றேயொன்றைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஒரேயொரு வெளிப்படையான உண்மை அது. நான் ஒரு சாதாரண மனிதனின் சாதாரண மகன். அது தெள்ளத் தெளிவான உண்மை என்று எனக்குத் தெரியும். ஆனால், நான் அந்த உண்மையைத் தோண்டத் தொடங்கும்போது எனது தந்தையுடையதும் எனதுமான வாழ்க்கையில் நடந்த எல்லாமும் விபத்தென்று தெளிவாகிறது. நாம் நமது வாழ்க்கைகளை இப்படித்தான் வாழ்கிறோம்: விபத்தின் வழியாகவும் தற்செயலாகவும் விஷயங்களை நோக்குவதுதான் ஒரே சாத்தியமான எதார்த்தமாக இருக்கமுடியும்.

பரந்துபட்ட நிலத்தில் மழைத்துளிகள் விழுவதைக் கற்பனை செய்து பார்ப்போம். நம்மில் ஒவ்வொருவரும் எண்ணற்ற மழைத்துளிகளில் ஒரு பெயரற்ற மழைத்துளி. தனித்துவமான, தனித்த துளியென்றாலும் அது முழுமையாக இடம்பெயர்க்க முடியக்கூடியது. இருப்பினும் அந்தத் தனித்துளிக்கென்று உணர்ச்சிகள், அதன் வரலாறு, அந்த வரலாறைச் சுமந்து கடப்பதற்கான பிரத்யேகக் கடமை எல்லாம் உண்டு. அத்துளி தனது தனித்த ஒருமையை இழந்து கூட்டான வேறொன்றால் உட்கொள்ளப்படலாம். அல்லது தன்னை விடப் பெரிதான கூட்டு இருப்புக்குள் துல்லியமாக சங்கமமாகிவிடவும் செய்யலாம்.

அவ்வப்போது, சுகுகவாவில் உள்ள எங்கள் வீட்டுத் தோட்டத்தில் அந்தத் துயரத்துக்குரிய பைன் மரத்துக்கு மனம் என்னை அழைத்துச் செல்கிறது. கிளையை இன்னும் பற்றியிருக்கும் அந்தக் குட்டிப்பூனை, வெளிறிய எலும்புகளாக மாறிப்போன அதன் உடல் பற்றிய யோசனைகளை நோக்கிப் போகிறேன். அத்துடன் நான் மரணம் பற்றி எண்ணி பார்க்கிறேன், அத்துடன் பூமியை நோக்கி கீழே இறங்குவதன் சிரமத்தையும் வெகு தூரத்தில் தெரியும் தரை தலையைச் சுற்றச் செய்வதையும். ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
**<shankarashankara@gmail.com>**

# மகரிஷி மறைந்தார்!



**விட்டல்ராவ்**

காலையில் பாவண்ணன் இப்படியென்று தகவல் கொடுக்கவும்,சேலத்துக்குத்தொடர்புகொண்டு பேசினேன்.

“நேத்து ராத்திரி சுமார் பதினோர் மணியிருக்கும். படுத்துக்கறேன்னு போனவர்தான். திடீரென்று ஹார்ட் அட்டாக்”, என்றார் திருமதி மகரிஷி.

நேற்றிரவு, 27092019 அன்று ‘சேலம் மகரிஷி’ என அறியப்படும் டி.கே. பாலசுப்பிரமணியம் அவர்கள் காலமானார்.

“அவருக்கு என்ன வயசு?” என்று கேட்டேன்.

“எண்பத்தேழு, ஒடம்புக்கொண்ணுமில்ல”, என்றார்.

வார இதழில் சிறுகதைகள் எழுதுவார். வானொலிக்காக நிறைய நாடகங்களை எழுதி நடிப்பார். ஒரு நடிகர் என நினைக்குமளவு சிகை வைத்திருப்பார். ‘ரேடியோ நடிகர்’, என்று எங்கள் சென்ன கிருஷ்ண புரம் பகுதியில் மகரிஷிக்குப் பெயர். சென்ன கிருஷ்ண புரம் நுழைவாயிலில் பக்கத்துக்கு ஒன்றாகப் பெரிய பூசனிக்காய்கள் செய்து வைத்த (சமீபத்தில் போயிருந்தபோதும் அப்படியே இருக்கின்றன) பெரிய தலைவாசலைக் கொண்ட மிகப் பெரிய பங்களாவை வேலாயுதம் பங்களா என்பார்கள். வேலாயுதம் பிள்ளை சேலத்தில் ‘ஏஞ்செல் ஃபிலிம்ஸ்’ என்ற கூட்டுத் தாயரிப்பின் கீழ் சில தமிழ்த் திரைப்படங்களை (பக்த துருவன், கிருஷ்ண தூது முதலியன) 1937இல் தயாரித்தவர். ஏஞ்செல் ஃபிலிம்சில் ஒரு பாகஸ்தராக இருந்த டி.ஆர். சுந்தரம் அவர்கள் அதிலிருந்து விலகிப்போய் மாடர்ன் தியேட்டர்ஸை நிர்மாணித்து படங்களை எடுத்தார். வேலாயுதம் பிள்ளை பூசனிக்காய் பங்களாவில்தான் எம்.ஏ. வேணு தயாரித்த புகழ் பெற்ற ‘முதலாளி’ (எஸ்.எஸ்.ஆர். தேவிகா) படம் முழுக்க முழுக்க படமாக்கப்பட்டது. வேலாயுதம் பிள்ளை பங்களாவைப் பார்த்தவாறு இருந்தது, மாடர்ன் தியேட்டர்ஸ் டி.ஆர். சுந்தரம் அவர்களின் பங்களா. மாலை நேரங்களில் வெளியில் தன் காரை சுந்தரமே துடைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். அருகில் மாடர்ன் தியேட்டர்ஸ் அலுவலகம் தபாலாபீசை அடுத்து இருந்தது.

ஆரம்பத்தில் பத்திரிகைகள் எதிலும் எழுதாமல் நேரடியாக தம் நாவல்களை மீனாட்சி புத்தகாலயம் வழியாகப் பதிப்பித்தார் மகரிஷி. எங்கள் பேட்டைவாசியான மகரிஷியை நெருங்கிப் பழகும் வாய்ப்பை எனக்கு ஏற்படுத்தி வைத்தது நாங்கள் பணியாற்றிய தனியார் மின்சார வினியோக கம்பெனி. சேலம் ஈரோடு எலெக்ரிசிடி டிஸ்டிரிபூஷன் கம்பெனி (S.E.E.D.Co.) என்பது கல்கத்தாவிலிருந்த ஆக்டேவியஸ் ஸ்டீல் கம்பெனி எனும் பிரிட்டிஷ் கம்பெனியின் மற்றொரு ஸ்தாபனம். மேட்டூர் அணையில் உற்பத்தியாகும் மின்சாரத்தை மொத்தமாக வாங்கி சேலம், ஈரோடு, ஆத்தூர் ஆகிய பகுதி வீடுகளுக்கும் பயிர் நிலங்களின் பம்ப் செட்டுகளுக்கும் மின்சாரம் வினியோகித்தல், புதிய மின் இணைப்புகள் வழங்கல், பழுது பார்த்தல் என்பன அதன் பணிகள். இதையே தூத்துக்குடி திருநெல்வேலி எலெக்டிரிசிடி டிஸ்டிரிபூஷன் கம்பெனியென அந்த மாவட்டப் பகுதியிலும் ஆக்டேவியஸ் ஸ்டீல் கம்பெனி செய்து வந்தது.

எஸ்.ஈ.ஈ.டி. கம்பெனியின் ஸ்டோர்சில், மகரிஷி ஸ்டோர் கீப்பராக பணியாற்றி வந்தார். அது அஸ்தம்பட்டியருகில் இன்றுள்ள சாரதா மகளிர் கல்லூரியருகில் இருந்தது. நானும் அங்கு குமாஸ்தாவாக பணியிலமர்ந்தேன். மகரிஷி பத்து



வார்த்தை பேசினால் அதில் ஆறு வார்த்தைகளில் வயிறு குலுங்க வைக்கும் நகைச்சுவை தொனிக்கும். முத்து முத்தான கையெழுத்து அவருக்கு. நான் தேர்வு செய்யும் ஆங்கிலப் படங்களுக்கு இருவரும் செவ்வாய்ப் பேட்டை மரக்கடை சந்திலிருந்த நியூ இம்பீரியல் தியேட்டருக்குப் போய்விட்டு வருவோம்.

தீபத்தில், கல்கியில், குமுதத்தில் ஏராளமான குறுநாவல்களை எழுதினார். அவருடைய நாவல் 'பனிமலை', அவரது அனுமதியின்றி கே.எஸ். கோபாலகிருஷ்ணன் என்பவரால் 'என்னதான் முடிவு', என்ற பெயரில் திரைப்படமாக்கப்பட்டது. மகரிஷி நீதிமன்றத்துக்கு போகவிருந்தபோது கே.எஸ்.ஜி. மன்னிப்பு கோரி, கதைக்கு உரிய பணத்தைக் கொடுத்தார். மகரிஷியின் 'தரையில் பிடித்த மீன்', 'வட்டத்துக்குள் சதுரம்', 'சாய்ந்தாடம்மா சாய்ந்தாடு', 'நீச்சல் குளம்' ஆகிய குறுநாவல்களும் சினிமாவுக்காக வாங்கப்பட்டன. அந்த வரிசையில் சினிமாவாகி மிகுந்த வெற்றிப்படமெனத் திகழ்ந்தது, அவருடைய குறுநாவல் 'பத்ரகாளி'யும், 'புவனா ஒரு கேள்விக்குறி'யும்.

'தீபம்' நா. பார்த்தசாரதிக்கும் 'கல்கி' கி. ராஜேந்திரனுக்கும் என்னை அறிமுகப்படுத்தி வைத்தவர் மகரிஷிதான். ஒரு தமிழ் எழுத்தாளர் மாநாட்டுக்கு அழைத்துப்போன மகரிஷிதான், என்னை லா.ச.ரா, கு. அழகிரிசாமி, பகீரதன், விக்கிரமன் ஆகியோருக்கும் அறிமுகப்படுத்தி வைத்தார். அவருடைய கதைகளில் சனாதன தர்ம இழையோடலும் அக்ரகார வாசனையும் தூக்கலாக நிற்கும். அவை ஒரு போதும் என்னைப் பாதித்ததில்லை, வசீகரிக்கவில்லை என்றாலும் நீண்ட நாளைய எங்கள் நட்பில் குறுக்கிட்டதுமில்லை.

நான் தொலைப்பேசி இலாகாவில் வேலை கிடைத்து சென்னையில் குடியேறிய பிறகு, தனியார் மின்சார வினியோக கம்பெனிகள் யாவும் அரசின் மின்சார வாரியத்தில் சேர்க்கப்பட்டு, மகரிஷி அரசுப் பணியாளராகி ஓய்வு பெற்றார். இளமையில், ஒரு நடிகனைப் போன்ற முகச் சாயலும் வசீகரமுமாயிருந்த மகரிஷி சேலம் செர்ரி ரோடில், சேலம் கல்லூரிக்கு எதிரிலிருந்த மாவட்ட நூல் நிலையத்துக்கு தினமும் போய் வரும் சமயம், அங்கு பணியாற்றிய இளம் பெண்ணான நூல்நிலைய (நூலகம்) பணியாளருக்கும் மகரிஷிக்கும் காதல் ஏற்பட்டு, கல்யாணத்தில் முடிந்து மகன், மகள் என வாழ்க்கை கிளைவிட்டுத் தழைத்தது.

பதினைந்தாண்டுகளுக்கு முன் குடும்பத்தோடு நான் சேலம் சென்று ராஜா கவுண்டர் விரிவிலிருந்த அவர் வீட்டில் தங்கியிருந்தேன். மனைவிக்கு உடல் சுகவீனம் அதிகமாவதையடுத்து அவர் தன் வீட்டை விற்றுவிட்டு மகனோடு போயிருந்தார்.

நேற்றிரவு எவ்வித தொந்தரவுமில்லாது தம் 87ஆவது வயதில் மாரடைப்பில் காலமானார். மறுநாள் காலையில் சேதியறிந்து அவர் மனைவியோடு தொலைப்பேசியில் தொடர்புகொண்டு விவரமறிந்தேன். கடைசியாக அவரது எழுத்துக்களை நான் அச்சில் பார்த்தது, அம்ருதாவின் முத்துக்கள் பத்து வரிசையில் வெளிவந்த சிறுகதை நூலில்தான். ●

சிறுகதை

# துண்டிக்கப்பட்ட தலையில் சூடிய ரோஜாமலர்



உதயசங்கர்

இரண்டுதண்டவாளங்களுக்கு நடுவில் அந்தத் தலை, விரிந்த கூந்தல் சுற்றிலும் விசிறிக்கிடக்க, வானத்தை அண்ணாந்து பார்த்தபடி கிடந்தது. வெள்ளை வெயிலில் மேகங்கள் தங்களை அழகு பார்த்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தன. அந்த மேகங்களை வேடிக்கை பார்க்கிற மாதிரி பாதிக்கண்கள் திறந்திருக்க, உதடுகளில் ஒரு வேதனை என்றோ புன்னகை என்றோ சொல்லமுடியாத ஒரு பாவத்துடன் கிடந்த அந்தத்தலையைத் தண்டவாளப்பராமரிப்பு பணி செய்து கொண்டிருந்த சண்முகம்தான் முதலில் பார்த்தான். முகத்தில் ரத்தத்துளிகளின் சிவப்பு, சிறுகுழந்தை சாந்துப்பொட்டை முகத்தில் கன்னாபின்னாவென்று இழுவிக் கொண்டதைபோலிருந்தது.

சண்முகம் சுற்றுமுற்றும் பார்த்தான். முண்டத்தைக் காணவில்லை. ஒருவேளை உடல் ஓடும் ரயிலில் சிக்கி வேறெங்காவது கிடக்கிறதோ என்னவோ.அந்த இடத்தில் ரத்தத்தின் கவிச்சி வாடையே இல்லை. நல்லதொரு சுகந்தம் வீசியது. ஒரு பூவின் வாசனை. முதலில் அது என்ன வாசனை என்று புரியாவிட்டாலும் மிகவிரைவில் ரோஜாவின் மணம் என்று சண்முகம் உணர்ந்துகொண்டான். துண்டிக்கப்பட்ட தலையிலுள்ள கூந்தலின் உச்சியில் ஒரு பெரிய ரோஜாப்பூ ஹேர்பின்னால் கோர்க்கப்பட்டிருந்தது.அதிலிருந்தா இத்தனை மணம் வருகிறது? அவன் ஆச்சரியப்பட்டான்.

இத்தனை ரயில் அதிர்வுகளிலும் அந்தப்பூ கூந்தலிலிருந்துகீழே விழாமலிருந்தது ஆச்சரியம்தான். சண்முகம்தண்டவாளத்திலிருந்த தலையை கூந்தலைப் பிடித்துத் தூக்கி வெளியே ஒத்தையடிப்பாதையில் வைத்தான். வைக்கும்போது எங்கே அந்தத்தலைக்கு வலித்துவிடுமோ என்றுமெதுவாகவைத்தான். தலையை மண் தரையில் வைத்ததும் அந்த முகம் லேசாகச் சுளித்தது. முன்பு இருந்த இடமே வசதியாக இருந்ததைப் போல அதிருப்தியில் உதடுகளை நெளித்தது.

“த்தலக்க… வீட்ல பிரச்னைன்னா உடனே ரயில்ல விழுந்து நம்ம உசிர எடுக்க வேண்டியது…” என்று வாய் விட்டுத் திட்டினான். கையில் அந்த கூந்தல் மயிர் ஒட்டிக்கொண்டிருப்பதைப்போல கைகளை உதறினான். கீழே கிடந்த பேப்பரில் கைகளைத் துடைத்தான்.

குறைந்தது மாதம் ஒருசாவு தண்டவாளத்தில் நிகழ்ந்து விடுகிறது.இப்படி நிறைய உடல்களைப் பார்த்திருக்கிறான் சண்முகம். கைகால்கள் மட்டும் துண்டிக்கப்பட்ட பிணங்கள், உடல் இரண்டாக வெட்டப்பட்ட பிணங்கள், உடல்சிதைந்துசதைத்துண்டுகளாகதண்டவாளம்நெடுக வீசியடிக்கப்பட்ட பிணங்கள், தலை மட்டும் தனியாக வெட்டப்பட்ட பிணங்கள்,எந்த வெளிக்காயமும் இல்லாமல் ஊமைக்காயத்தினால் இறந்து கிடக்கும் பிணங்கள்.

பிணங்களைப் பார்த்துக்கொண்டேயிருப்பதாலும் அதை எடுத்து வைக்க, நாய்கள் வாயை வைக்காமல் பாதுகாக்க, பிணங்களின் அருகே இருக்க வேண்டியதிருக்கும். அதனால் சண்முகம் அதிர்ச்சியடையமாட்டான். முதலில் அந்த ரத்தக்காயங்களைப் பார்த்து அருவெறுப்பு அடிவயிற்றிலிருந்து பொங்கி வரும். ஆனால், நேரம் ஆக ஆக பிணம் பழகிவிடும். மீண்டும் மீண்டும் பிணத்தைப்



பார்த்துக்கொண்டேயிருப்பான்.பிணத்தின்கடந்தகால வாழ்க்கையைப் பற்றி யோசித்துக்கொண்டிருப்பான்.

இங்கே தலை மட்டும் கிடக்க உடலைக் காணோம் என்பது ஒரு விவகாரமான விஷயம்தான் என்று சண்முகம் நினைத்தான். அவன் மேலும் கீழுமாய் இரண்டு மூன்று கிலோமீட்டர் தூரம் நடந்து சென்று பார்த்தான். தண்டவாளங்களுக்கு வெளியே இரண்டு பக்கமும் அடர்ந்திருந்த புதர்ச்செடிகளில் பார்த்தான். எதுவும் தெரியவில்லை. ஸ்டேஷன் மாஸ்டருக்கு ரோஜாப்பூ சூடிய தலை கிடந்த இடத்தைக் குறிப்பிட்டு கடிதம் எழுதி, உடன் வேலை பார்த்த சோமுவைக் கூப்பிட்டுகொடுத்துவிட்டான்.தண்டவாளக்கரைக்குக் கீழே இருந்த ஒரு சிறிய வேப்பமரத்தின் நிழலில் போய் நின்றான். போலீஸ் வரும்வரை தலைக்குக் காவல் இருக்கவேண்டும். வேப்பமரம் தலையாட்டி தலையாட்டி நிழலைவிட வெயிலைத்தான் அதிகமாக ஒழுகவிட்டது.

இப்போது அந்தத்தலை தண்டவாளத்தின் ஓரத்தில் இருந்த ஒத்தையடிப்பாதையில் கிடந்தது. பகல் முழுவதும் வெயிலில் கிடந்ததால் முகம் கருத்துப்போயிருந்தது. அந்த வழியே தண்டவாளத்தைக் கடந்தவர்கள் கடைசி நொடியில் அந்தத் தலையைப் பார்த்து துள்ளிக்குதித்து விலகி ஓடினார்கள். யாரோ ஒருவர் அது ஒரு குப்பை என்று நினைத்து மிதிக்கவே போய்விட்டார். இன்னொருவர் அதைத் தன் வலது காலால் எத்திவிட்டார். லேசாய் அசைந்த தலையில் இருந்த கண்கள் அவரைப் பார்த்தன. "அய்யோ" என்று கத்தியபடி தலைதெறிக்க ஓடிவிட்டார்.

இதற்குள் ரயில்வே போலீஸ் வந்து பார்த்தார்கள். கொலையாக இருக்கலாமோ என்று சந்தேகப்பட்டார்கள். வேறெங்காவது கொலை செய்து கழுத்தையறுத்து இங்கே கொண்டு வந்து போட்டிருக்கலாமோ என்ற கோணத்தில் யோசித்தார்கள். உடலைக் காணவில்லை என்றதும் அவர்களுக்கு மேலும் மேலும் சந்தேகம் வலுத்தது. வேடிக்கை பார்த்தவர்களிடம் சொல்லி அருகில் உள்ள வீடுகளிலிருந்து ஒரு சாக்குப்பையை வாங்கச்சொன்னார்கள். சாக்குப்பையில் கூந்தலைப் பிடித்து தலையைத் தூக்கி வைத்தார்கள். அப்படி வைக்கும்போது கூந்தலின் உச்சியில் ஹேர்பின்னால் கோர்க்கப்பட்டிருந்த அந்த ரோஜாப்பூ பாதையில் கீழே விழுந்துவிட்டது.

அந்தப் பெண் ஒரு வயதாக இருக்கும் போது அவளுடைய அப்பா வாங்கிக்கொண்டு வந்து சூடிய பூ. ஒரு நாளும் வாடியதுமில்லை. கூந்தலிலிருந்து விழுந்ததுமில்லை.

நள்ளிரவில் நட்சத்திரங்கள் பூமியை நோக்கி இறங்கிவந்தன. அப்போது லேசான காற்றில் அசைந்த ரோஜா நட்சத்திரங்களைப் பார்த்தது. அப்படியே மேலே பறந்தது.வாடாத அதன் ஏழு இதழ்கள் ஒவ்வொன்றாய் உதிரத்தொடங்கின. அப்படி உதிரும்போது அந்த இதழ்கள் காற்றில் எழுதியெழுதிக் கொண்டே சென்றன. அவை எழுதி முடிப்பதற்காகக் காற்றும் மிக மெதுவாக அசைந்தது.

துண்டிக்கப்பட்ட தலையில் சூடிய ரோஜா மலரின்

முதல் இதழ் சொன்ன கதை..

*இரவு முழுவதும் பிரசவவாதையினால் தாயை வாட்டியெடுத்து, அதிகாலை மூன்று முப்பத்தியிரண்டுக்கு பிறந்த ஜெயலட்சுமி,பிறக்கும்போதே கொடியை மாலையாகச் சுற்றிப் பிறந்தாள். கொடி சுற்றிப்பிறந்தால் குடும்பத்துக்கு ஆகாது என்ற பழைய நம்பிக்கையையும் தாண்டி அம்மாவுக்கும் அப்பாவுக்கும் மகிழ்ச்சியில் தலைகால் புரியவில்லை. அன்று அதிகாலையிலேயே மருத்துவமனை யிலிருந்த அத்தனை பேருக்கும் இனிப்பு வழங்கிக் கொண்டாடினார்கள். இரண்டு ஆண்பிள்ளைகளுக்குப்பின் வேண்டி விரும்பி வந்த மகள் ஜெயலட்சுமி.*

*அவள் பிறந்த ஆண்டு அப்பா நடத்திக்கொண்டிருந்த பைனான்ஸ் தொழில் சூடுபிடித்து ஓட்டமாக ஓடியது. கணக்கு வழக்கில்லாமல் பணம் வந்தது. நிலபுலன்கள், சொத்து, வீடு, வாசல் என்று செல்வம் கரைபுரண்டோடியது. எல்லாம் ஜெயலட்சுமியின் ராசி என்று எல்லோரும் நினைத்தபடியால் அவளைக் கொண்டாடினார்கள். அவளுடைய முதல் பிறந்த நாளைக்கு ஊரோடு அழைத்து சாப்பாடு போட்டார்கள்.பிறந்த நாளன்று அப்பா ஊட்டியிலிருந்து பூக்களைத் தருவித்திருந்தார். அந்தப் பூக்களில் பெரிய இதழ்களையுடைய ரோஜாவைத் தனியே ஜெயலட்சுமியின் தலையில் சூடிவிட்டார். முடியே இல்லாத அந்தத் தலையில் ரோஜா ஒட்டிக்கொண்டு விட்டது. அன்றிலிருந்து ஜெயலட்சுமி அந்த ரோஜாவை தலை யிலிருந்து எடுத்ததேயில்லை.*

*ஒருபோதும் வாடாத அந்த ரோஜா தினமும் அவளுடைய தலையில் நறுமணத்துடன் பூத்துக்கொண்டேயிருந்தது. அப்பாவும் அம்மாவும் அண்ணன்களும் அவளைக் கொஞ்சும்போதெல்லாம் அந்த ரோஜாவின் மணம் ஊர் முழுவதும் வீசும்.இருபத்திநான்கு மணிநேரமும் அந்த ஊரின் தலைக்குமேல் ரோஜாவின் சுகந்தம் மேகங்களைப் போல மிதந்து கொண்டிருந்தது.*

ரோஜா காற்றின் கடைசியசைவில் கீழே இறங்கியது. மிட்டாய் வாங்க துட்டு கேட்டு அம்மாவால் பள்ளிக்கூடத்துக்கு அடித்து விரட்டப்பட்ட குழந்தையின் தலையில் போய் விழுந்தது. அழுது கொண்டேயிருந்த அந்தக்குழந்தை திடீரென தன்னைச் சுற்றி மிட்டாயின் வாசம் வீசுவதை நுகர்ந்தாள். தலையில் கை வைத்து அந்த ரோஜா இதழை எடுத்த அந்தக்குழந்தை வாயில் போட்டு மென்று தின்றாள். மிட்டாயாய் இனித்தது துண்டிக்கப்பட்ட தலையில் சூடியிருந்த ரோஜா மலரின் இதழ்.

மேகங்களுக்கிடையில் குட்டி மேகமாக பறந்து கொண்டிருந்த ரோஜா மலரின் இரண்டாவது இதழ் சொன்ன துர்க்கனவு..

*ஜெயா பள்ளிக்கூடம் போக வேண்டிய வயது வந்தவுடன் அவளுக்காக அப்பா ஒரு பள்ளிக்கூடம் கட்டினார். பள்ளிக்கூடம் பைனான்ஸைவிட வருமானம் தந்தது. ஜெயா சுமாராகப்படித்தாலும் சூப்பராகப் படிப்பதாக எல்லோரும் சொல்வது இயற்கைதானே. ஜெயாவுக்கு அப்போதெல்லாம் ஒரு கனவு தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது. அந்தக் கனவுகளில் அவள் மேகங்களூடே பறந்து கொண்டிருப்பாள். எடையற்ற தன் உடலைப் பார்க்க ஆனந்தமாக இருக்கும். மேலேயிருந்து கீழே பார்க்கும்போது தெரியும் மனிதர்கள் மரப்பாச்சிப்பொம்மைகளைப் போலத் தெரிவார்கள். ஒரு பெரிய ரோஜாப்பூ தன் இதழ்களை விரித்து பளீரெனச் சிரிப்பதைப் பார்ப்பாள். எல்லாவற்றைக் காட்டிலும் பெரியதாகத் தெரியும் அந்தப்பூ கருப்பாக மாறத்துவங்கும்போது அவளுக்கு மூச்சுத் திணற ஆரம்பிக்கும். அவ்வளவு காற்றிலும் அவளுடைய மூச்சுக்குழாயை எதுவோ அடைப்பது போல தோன்றும். ஒரு பாறாங்கல்லைப் போல அவள் வேகமாகக் கீழே விழுவாள்.*

*சிலசமயம் ஒரு தாமரைக்குளத்தில் நீந்திக்கொண்டிருப்பாள். மீன்கள் பேசும் அந்தக்குளத்தில் அவள் ஒரு மீனைப்போலவே நீந்திக் கொண்டிருப்பாள். ஒரு புலர்காலை வேளையில் குளத்தின் நடுவில் ஒரு ரோஜாப்பூ மிதந்து கொண்டிருந்தது. அவளை நோக்கி அலைகளை வீசி அந்த ரோஜாப்பூ அழைத்தது. அவள் ரோஜாப்பூவைப் பார்த்து நீந்தினாள். அப்போதும் அப்படித்தான் அவளுடைய தொண்டையில் எதுவோ அடைத்துக்கொள்ள மூச்சுத்திணறும். குரல் எழும்பாது. அவள் தூக்கத் திலிருந்து துள்ளி அப்பாவின் மடியில் விழுவாள். இந்தக் கனவின் சமிக்ஞை எதுவென அவள் தோழிகளிடம் கேட்டாள். வாழ்வில் இன்னும் பெரிய அதிர்ஷ்டம் உனக்கு வரப்போகிறது என்று சொன்னார்கள். அவள் நம்பவில்லை நம்பாமலும் இருக்க முடியவில்லை.*

*பள்ளியிறுதி வகுப்பு முடிந்து கல்லூரியில் சேர்ந்தபோது அரவிந்த் என்ற அதிர்ஷ்டம் வந்ததாக நினைத்தாள். அந்த மூன்று ஆண்டுகள் அவளுடைய வாழ்க்கையில் முந்நூறு ஆண்டுகளாகவும் மூன்று நொடிகளாகவும் ஒரே நேரத்தில் மாறியது. உலகின் வண்ணங்கள் அனைத்தும் அவளுடலில் ஏறியது. அவள் வண்ணக்குரல்களில் பாடலிசைத்தாள். அந்தப் பாடல்களில் எல்லைகள் இல்லை. ராகங்கள் இல்லை. சுரங்கள் இல்லை. எல்லையற்ற ஓசைவெளியில் அவளுடைய குரல்கள் நடனமாடிக்கொண்டிருந்தன. அந்த நடனத்தில் ஒரு ரோஜாப்பூ பூத்துக் கொண்டே யிருந்தது. அந்தப்பூவின் மணம் அந்த ஊரையே மயக்கியபோது அந்த வீட்டையும் மயக்காதா என்ன?*

கலைந்த மேகங்களிடமிருந்து கீழே இறங்கிய ரோஜாப்பூவின் இரண்டாவது இதழ் அப்போதுதான் பருவம் எய்திய ஆட்டின் முன்னால் போய் விழுந்தது. காய்ந்த புற்களை கறம்பிக்கொண்டிருந்த அந்த ஆடு இதழையும் சேர்த்து தின்றது. உடனே உடலில் ஒரு கதகதப்பு ஏற கிடாயை நோக்கியது.

துண்டிக்கப்பட்ட தலையில் சூடிய ரோஜா மலரின் மூன்றாவது இதழின் கண்ணீர்..

*இதுவரை அழுதறியாத ஜெயலட்சுமி அப்பா அழுவதைப் பார்த்து அழுதாள். காலில் விழுந்த அரவிந்தையும் ஜெயலட்சுமியையும் சேர்த்து எழுப்பினார். ஐந்து நிமிடங்களில் சாதாரணமாகப் பேசத்தொடங்கிய அப்பா, அவர்கள் இரண்டு பேரையும் உடனே ஊருக்கு அழைத்துச் செல்ல விரும்பினார். தயங்கிய அரவிந்தை ஜெயலட்சுமிதான் சமாதானப்படுத்தினாள். எப்போதெல்லாம் அவள் அப்பாவைப் பார்க்கிறாளோ அப்போதெல்லாம் அப்பா கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தார். அப்பாவின் கண்களைப் பார்க்கும்போதெல்லாம் அதில் கொப்பளிக்கும் ஊற்றாகப் பொங்கிக் கொண்டிருந்த பாசத்தைப் பார்த்தாள். அன்று இரவே அவர்கள் கிளம்பினார்கள். அப்போதும் கூந்தலில் அப்பா சூடிய ரோஜாப்பூவைச் சூடியிருந்தாள் ஜெயலட்சுமி.*

*ஜெயலட்சுமியை அறையில் கைகளைக் கட்டிக் கிடத்தியிருந்தார்கள். அரவிந்தைக் காணவில்லை. அவளுடைய கதறல்களும் அழுகையும் அந்த அறையிலேயே சுழன்று சுழன்று ஒரு நீர்ச்சுழி போல சுற்றிக் கொண்டிருந்தன. அப்பாவும் அண்ணன்களும் வந்தார்கள். ஆனால், அப்பாவும் அண்ணன்களுமாக இல்லை. யாரோ எந்த ஜென்மத்திலும் பார்த்திராத அந்நியர்களைப் போல இருந்தார்கள். அவர்களின் கையில் பட்டாக்கத்தியும் வெட்டரிவாளும் இருந்தன. அதில் ரத்தம் தோய்ந்திருந்தது.*

*அப்பா வீட்டில் கோழியை அறுக்கும்போது மிக நிதானமாக ஒரு தியானம் செய்வதைப் போல முகத்தை வைத்துக்கொள்வார். அந்த முகமும் கண்களும் உலர்ந்து போயிருக்கும். கண்களில் உள்ள கோலிக்குண்டுகளில் ஈரப்பசையே இருக்காது. ஏற்கனவே கால்களைக் கட்டியிருக்கும் கோழியை அப்படியே படுக்க வைத்து ஒரு காலால் கால்களையும், ஒரு காலால் ரெக்கைகளையும் மிதித்துக்கொண்டு இடது கையினால் கோழியின் கொதவளையை நிமிர்த்திப் பிடித்துக்கொண்டு வலது கையினால் கரகரவென கழுத்தை அறுப்பார். கழுத்திலிருந்து பீச்சும் ரத்தத்தைப் பார்த்து ஒரு புன்னகை புரிவார். திமிறும் கோழியின் உடல் அதிர்வு அவருக்குக் கிளர்ச்சியைக் கொடுக்கும். முழுக்கழுத்தையும் அறுத்து கோழியின் உடல் உதறுவதை நிறுத்தும்போதுதான் அவர் கால்களை எடுப்பார். அறுத்த கத்தியின் ரத்தத்தை கோழியின் உடலிலேயே துடைப்பார். அறுபட்டு அசையாமல் கிடக்கும் உடலை சில நொடிகள் உற்றுப்பார்ப்பார். பிறகு திருப்தியுடன் எழுந்து அண்ணன்களைப் பார்ப்பார். அவர்கள் வாயெல்லாம் பல்லாக நிற்பார்கள்.*

*ஜெயலட்சுமி தயாராகிவிட்டாள். அப்பாவின் ஓங்காரக்குரல் கேட்டது.*

*“ஒங்கூதிக்கு ....பய சுன்னி கேக்குதோ...”*

துண்டிக்கப்பட்ட தலையில் சூடிய ரோஜாப்பூவின் மூன்றாவது இதழ் கருகிப் போனது. அதன் கருகிய ரத்தவாசனை அந்த ஊரின் மீது படர்ந்திருந்தது. அன்று இரவு அந்த ஊரில் படுத்துறங்கிய அனைவரும் நள்ளிரவில் தங்களுடைய கழுத்தை யாரோ அறுப்பதைப்போலக் கனவுகண்டு துள்ளி எழுந்தனர். பலருடைய கழுத்தில் ரத்தம் துளிர்த்திருந்தது. அந்த இதழ் மட்டும் கீழே இறங்காமல் ஒவ்வொரு வீட்டின் கூரையிலும் பறந்து சென்று தங்கியது. அது தங்கியிருந்த அந்த வீட்டில் அன்று ஏதாவது துர்ச்சகுனங்கள் ஏற்பட்டன.

துண்டிக்கப்பட்ட தலையில் சூடியிருந்த ரோஜாப்பூவின் நான்காவது இதழ் வாடி வதங்கி துண்டிக்கப்பட்ட தலை கிடந்த இடத்திலிருந்து நூறு கிலோமீட்டர் தூரத்திலிருந்த பெரிய தாமரைக்குளத்தில் கட்டிய கல்லுடன் நீருக்குள் கிடக்கும் ஜெயலட்சுமியின் முண்டத்தில் போய் விழுந்தது. மறுநாள் அந்தக்குளத்தில் தாமரைப்பூக்களுக்குப் பதிலாக ரோஜாப்பூக்கள் பூத்திருந்தன. மக்கள் கூட்டம் கூட்டமாய் வந்து பறித்துச் சென்றனர்.

துண்டிக்கப்பட்ட தலையில் சூடியிருந்த ரோஜாப்பூவின் ஐந்தாவது இதழ், காற்றில் சுழன்று சுழன்று, குருமலைக்காட்டில் வாயில் குறியைத்திணித்து, உடலெங்கும் நூற்றியெட்டு வெட்டுக்காயங்களுடன் புதைக்கப்பட்ட அரவிந்தின் புதைகுழியின் மீது விழுந்தது. புதைக்கப்பட்டிருந்த உடல் ஒரு கணம் சிலிர்த்தடங்கியது. வெட்டுக்காயங்களிலிருந்து ரோஜாச்செடிகள் முளைவிட்டன.

மறுநாள் குருமலைக்காட்டில் ரோஜாச்செடிகள் முளைக்க ஆரம்பித்தன. அதன்பிறகு அந்த நகரம் முழுவதும் தெருவோரங்களிலும் சாக்கடை ஓரங்களிலும், குப்பை மேடுகளிலும் ரோஜாச் செடிகள் முளைக்க ஆரம்பித்தன. சண்முகம் மறுநாள் தண்டவாளப்பராமரிப்புப் பணிக்காக நடந்தபோது, இரண்டு தண்டவாளங்களுக்கு நடுவில் துண்டிக்கப்பட்ட தலை கிடந்த இடத்தில் ஒரு ரோஜாச்செடி முளைத்திருந்தது.

அதன்பிறகு தினம் தினம் வானத்தில் ஒரு பெரிய ரோஜாப்பூ பூத்துக்கொண்டிருப்பதை அந்த ஊர் மக்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். எல்லோர் தலைமீதும் துண்டிக்கப்பட்ட தலையில் சூடியிருந்த ரோஜா மலரின் ஆறாவது இதழும் ஏழாவது இதழும் காற்றுவெளியில் சுற்றிக்கொண்டிருந்தன. இன்னும் எழுதப்படவேண்டிய கதைகளுக்கான சொற்களைத் தேடிக்கொண்டிருந்தன. ●

**உதயசங்கர்<udhayasankar.k62@gmail.com>**



# டி. கண்ணன் கவிதைகள்

ஓவியம்: நடேஷ்

1

தலையாலங்காலத்து போரின்
(வேறு வேறு நாட்டார் ஆயினும்)
ஒரே படையில் பணி புரிந்தோம்
நான் ஜி.என்.பியிடம் சென்றேன்
உன் பாணி செம்மங்குடி
(உபயம்: நாம் தனித்திருந்த பனி இரவுகள்)
நீ ரிச்சர்ட்ஸ் என்றாய்
நான் கவாஸ்கர் என்பேன்
கடிதங்கள் அருகி வற்றின
அவ்வப்போது வரலாற்றின்
ஓய்வு நேரங்களில் நாம்
சந்தித்துக்கொண்டுதான் இருந்தோம்
இப்போதும் உன் சாயைகள்
என் வீட்டுக் கதவு தட்டப்படாமல் இல்லை
வேறொருவர் என நினைத்து
உன்னை நான் தவற விட்டுவிடக்கூடாது
சற்றுஞ்
அந்தியில் வந்து போ

2

எதையோ தேடி களைப்படைந்து வெளியேறியது மதியம்
வகுப்பிற்குள் உற்சாகமாய் நுழைந்தது அந்தி
குதூகலமானார்கள் பிரஜைகள்
பாடங்கள் ஏதும் எடுக்கவில்லை
இன்றைக்கும் நேற்றைக்குமான தன்
வித்தியாசம் பற்றி சிறு கண் சிமிட்டல்
குறிப்படுக்க அனுமதியில்லைதான்
குறிப்பெடுத்தனர்
மணி அடிக்கஞ்
அடுத்த ஆசிரியர் வருவதற்கு முன்
வகுப்பறையிலிருந்து வெளியேறியது அந்தி




பூச்சூட துடிக்கும் நீல வால் கிளிகள்
முதலில் பறந்தன
பின் தொடர்ந்தனர் மாணவர்கள்

3
என் பால்கனியை திறக்கும்போது
இதன் நிழலோவென எதிரே இரு பால்கனிகள்
திறக்கப்படுகின்றன
ஒன்றில் சாரம் கட்டிய இளைஞன்
இன்னோன்றில் பைப் பிடித்துக் கொண்டிருக்கும் முதியவர்
நாளாக மூவரும் வந்தனித்துக் கொள்வது சகஜமாயிற்று
ஒரு கோணலான முக்கோணப் பாதையில்
சிரிப்பும் வந்தனங்களும் பரிமாறப்படுகின்றன
அத்தூரத்தில்
அவனிடம் என் சாயல்
அம்முதியவரின் சாயல் எனக்கு
இன்று
நான் காண
தெரு கடக்கும் அந்த பெரும் பசுவை
அவர்களால் காணமுடியவில்லை
மேலும் அவர்கள் பால்கனி மாடத்தில்
கிளிகள் அமர்வதில்லை

4
இன்று அதிகாலை வான் பார்க்க
முதலில் கண்டது
அந்த ஒற்றை நட்சத்திரம்
'இன்று மழை கிடையாது' என்றது அது
சொன்னபடிக்கு நடந்தது
மனதில் ஒரு
குரூர
அதிருப்தி

5
அடர் வெயிலில் காய்ந்த வேட்டிக்கும்
கிரணம் படா வெளிச்சத்தில் உலர்ந்த வேட்டிக்கும்
நதிக்கரை மணலில் காய்ந்த வேட்டிக்கும்
ஒளிபடா இருட்டில் காய்ந்த வேட்டிக்கும்தான்

ஸ்பரிசத்தில் எத்துணை வேறுபாடுகள்
இதனை நான் எழுதும்போது
நான் கட்டியிருந்தது
இருளில் காய்ந்த வேட்டி
வித்தியாசம் தெரிகிறதா

6

தனது எண்பதாவது
வயதில் தீடீரென
இறந்து போனார் அப்பா
வீட்டில் நுழைந்தது துக்கம்
இனி மேல் என்ன என்ற கவலை
ஆரம்ப காரியங்கள் முடிந்த பின்னர்
வீட்டை விட்டு வெளியேறும் வழிகளை
தேடத் துவங்கியது துக்கம்
உறவினர்கள்
நினைவுகளால்
திடீர் திடீரென
அதன் வழிகளை
திறந்தார்கள்
மூடினார்கள்
வந்தது போல் வெளியேற
திணறிக் கொண்டிருந்தது
துக்கம்

## 7. 'லைக்குகளின்' ஈக்கள்

முகநூல் லைக்குகள் போல்
அந்த நாட்டு மாம்பழத்தின் மீது
ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன
நாளைடைவில் ஈக்கள்
குறைந்து
பின்
மறைந்து
வேறொரு அழுகிய மாம்பழத்திற்கு
சென்று விட்டன
ஈக்கள் அழுகிய மாம்பழங்களானது
தெரியாமல்
இன்னமும் 'லைக்கு'களுக்காக
காத்திருக்கிறது
அந்த நாட்டு மாம்பழம்

8

நான் வாழ விரும்பும் உலகில்
உனக்கு இடமில்லை
ஆனால் உன் மேல் வெறுப்பும் இல்லை
நீ புழங்கி கொண்டிருக்கும் உலகில்
என் மேல் வெறுப்பு
ஆனாலும் அனுமதிக்கிறாய்
தோட்டத்தில் மரங்கள் மீது
பட்டாம் பூச்சிகளின் நிழல்கள் பறக்கின்றன
தன்னை தன்னுள்
மறைத்துக் கொள்ளும்
பாவனையில் மரங்கள்

9

தேடியலைந்த உபயோகமற்ற நினைவொன்று
வீடு வந்தடைகிறது
வெளியேறுகிறது உபயோகம்
வந்த நினைவுடன் கூடிக்களிக்க
கண்கள் பனிக்கின்றன
உடலின் அகம் சற்றே பருமன் அடைகிறது
தன் நேரம் (யார் தீர்மானிப்பது)
முடிந்தவுடன் வெளியேறுகிறது அந்நினைவு
பாவம்ஞ்
நுழையக் காத்துக் கிடக்கிறது
உபயோகம்

10

அருகாமை தோட்டத்திற்கு
மேயப் போயிருந்தன என் சாயைகள்
(நானும் அடிக்கடி அங்கு செல்வதுண்டு)
கூட்டி வர நான் சென்றேன்
வருவதற்கு மறுத்தன அவை
நான் திரும்பிவிட்டேன்

அந்தி நுழைந்தது
எனைத் தொடர்ந்தன
சாயைகள்
நிழல்களை சுருட்டிக் கொண்டு ●

**"டி. கண்ணன்"**
**<krishnaswamy164@gmail.com>**



அ.ராமசாமி

# ஜல்லிக்கட்டு காண்டாமிருகமாகும் எருமை




'ஜல்லிக்கட்டு' படத்தை இயக்கியுள்ள லிஜோ ஜோஸ் பெல்லிசேரியின் முந்திய படம் 'அங்கமாலி டைரீஸ்'. படமாக்கப்பட்ட விதம், விவாதிக்கும் பொருண்மை காரணமாகக் கவனித்துப் பேசப்பட்ட படம். அந்தப் படத்தை விடவும் கூடுதல் கவனத்துடன் விவாதிக்கப்படக்கூடிய படமாக வந்துள்ளது, 'ஜல்லிக்கட்டு'. ஒருவிதத்தில் இந்திய சினிமாவை உலக சினிமாவிற்குள் நகர்த்தும் முயற்சி என்றுகூடச் சொல்லலாம்.

பெல்லிசேரி தனது படத்தின் மொத்தப் பரப்பிலும் ஜல்லிக்கட்டு எதையும் காட்டவில்லை. வாடிவாசலும் இல்லை; வாடிவாசலிலிருந்து கிளம்பும் திமில் அசையும் ஒரு காளையும் கூட இல்லை. படத்தில் இடம்பெற்றிருப்பது, வெட்டிக் கூறு போடப்பட்டு, கொண்டாட்ட நாளின் விருந்துணவாகவிருக்கும் எருமைமாடு மட்டுமே. ஒருமலைப்பிரதேசக்கிராமத்துக் கசாப்புக்கடைக்காரனால் வாங்கி வரப்பட்ட எருமை, வெட்டப்படுவதற்கு முன்பு, வெட்டிக் கத்தியிடமிருந்து தப்பித் தனது உயிர் வாழ்தலுக்கான எத்தணிப்புகளைச் செய்கிறது. அதன் பாய்ச்சலும் மூர்க்கமும்தான் ஜல்லிக்கட்டு.

படம் தொடங்கும்போது ஆரம்பக் காட்சியில் மிகச்சிறிய புழுக்களும் பூச்சிகளும் வண்டுகளும் அண்மைக் காட்சியாகத் திரை முழுக்கக்

காட்டப்படுகின்றன, மிகச்சிறிய உயிரிகளையும் உயிரற்றனவற்றையும் உருப்பெருக்கியில் பார்க்கும் போது உண்டாகும் அச்சம் அல்லது ஆச்சர்யத்தைப் படம் பார்க்க வந்தவர்களுக்கு உண்டாக்குகிறார் இயக்குநர். உலகில் தோன்றிய ஒவ்வொரு உயிர்களும் தானே அழிகின்றன. அல்லது இன்னொரு உயிரினத்தால் அழிக்கப்படுகின்றன. ஒருவிதச் சுழற்சியான இயங்குமுறை.

ஏன் பிறக்கின்றன; ஏன் மரிக்கின்றன என்பதற்கான விடைகளைச் சமயங்கள் ஒவ்வொன்றும் அதனதன் போக்கில் விரித்துப் பேசலாம். ஆக்கப்படுவதிலும் அழிக்கப்படுவதிலும் ஓர் உயிரினத்திற்கு இன்னொன்றின் மீது வருத்தங்களும் பகையும் கோபமும் வன்மமும் இருக்குமா? தெரியவில்லை. அவைகளுக்கு மொழி இருக்கிறதா? இருக்கலாம். அந்த மொழியை வாசிக்கும் திறன் மனித உயிரிக்கு இல்லை. ஆனால் அவற்றின் வாழ்க்கை என்னும் மொழியை மனிதர்கள் அறிந்தவர்கள் தான். அதை வாசித்துப் புரிந்து கொண்டவர்களும்கூட. ஆனால் அறிதலுக்கும் புரிதலுக்கும் பிறகு மனிதர்கள் வெளிப்பாடு என்னவாக இருக்கிறது?

இந்த உலகத்தில் தோன்றியுள்ள ஒவ்வொன்றும் - எல்லாவகை உயிரினங்களும் மனிதர்களின் தேவைக்காக மட்டுமே படைக்கப்பட்டிருக்கின்றன என்ற நினைப்பாகவும் நம்பிக்கையாகவும் இருக்கிறது. வாழ்க்கையின் தேவைக்காக மனிதர்கள் ஒவ்வொன்றையும் உருமாற்றியும் அழித்தும் சிதைத்தும் தனதாக்கிக் கொண்டே இருக்கிறார்கள். அதுபற்றிய குற்றவுணர்வுகள் இல்லாமலேயே கடக்கிறார்கள். இயற்கையோடும் உயிரினங்களோடும் மனிதர்களின் உறவும் பகையும் நேரடியாக உணரப்படுவதில்லை. எல்லா உயிர்களிடத்திலும் நானே இருக்கிறேன் என புனித வாக்கியங்களும், காக்கை குருவி எங்கள் ஜாதிநீள்கடலும் மலையும் எங்கள் கூட்டம் நோக்கும் திசையெலாம் நாமன்றி வேறில்லை நோக்க நோக்க களியாட்டம் என்பது போன்று உணர்ச்சிகரமான கவிதை வரிகளும், வாடிய பயிர்களைக் கண்டபோதெல்லாம் வாடினேன் எனத் தன்னிலையுரைக்கும் கூற்றுகளும் இலக்கியப் பனுவல்களில் எழுதப்பட்டு வழங்கப்பட்ட பின்னும் மனிதர்கள் பெரிதாகக் கண்டு கொள்ளவில்லை.

தொடர்ச்சியாக மனிதர்கள் உலகத்தை மனித மையமாகவே நினைக்கிறார்கள். அவர்களுக்காக படைத்தருளப்பட்டனவே எல்லாம் என நினைத்துக் கொல்கிறார்கள்; உண்கிறார்கள்; களித்துக் கூத்தாடுகிறார்கள். இதே நேரத்தில் மனிதர்கள் ஒவ்வொருவருக்குள்ளும் உண்டாகும் காதல், அன்பு, பாசம், துரோகம், பகை, வன்மம் போன்றன பேசுபொருளாக இருக்கின்றன. எழுதப்படுகின்றன; அடுத்த தலைமுறையை நல்வழிப்படுத்துவதற்கான அறமாகப் பதிவுசெய்யப்பட்டுக் கடத்தப்படுகின்றன. இதையெல்லாம் ஒரு சினிமாவில் எப்படிப் பேசுவது. நிகழ்வுகளாக்கிக் காட்சிப்படுத்துவது எப்படி? பெல்லிசேரியின் 'ஜல்லிக்கட்டு' அந்த முயற்சியைச் செய்திருக்கிறது.

உருப்பெருக்கப்பட்ட உயிரினங்களின் காட்சிகளைத் தொடர்ந்து, ஒரு மலைக்கிராமத்து வாழ்க்கையின் அன்றாடப் போக்கிலும் விருந்துகளிலும் இறைச்சி உணவு பெறும் இடத்தைக் காட்சிகளாகவும் பேச்சாகவும் சொல்லி நகர்கிறது. இறைச்சி உணவுக்காக எருமை மாடு வெட்டப்படுவதும் தோல் உரிக்கப்பட்டு, சதைத் துண்டுகளாக்கப்பட்டு கூறுபோடப்பட்டு, விற்பனைப் பொருளாக மாற்றப்படுவதும் காட்டப்படுகிறது. மதுக்கூடங்களிலும் திருமணம் போன்ற நிகழ்வுகளிலும் இறைச்சி உணவு தவிர்க்க முடியாத உணவாக மாறி யிருப்பதைக் காட்டுகிறது. அந்த ஊருக்கு வழக்கம்போல கொண்டுவரப்படும் ஒரு கணதியான எருமைக் கட்டுத்தறியிலிருந்து வெட்டுப்படாமல் தப்பிவிடுகிறது. தப்பியோடும் எருமையின் நோக்கம் உயிர்வாழ்தல். விரட்டிப் பிடித்துக் கூறுபோட நினைக்கும் வியாபாரிக்கு லாபம். வாங்கி உண்ணும் மனிதர்களுக்குச் சுவை; விருந்து கொண்டாட்டம். நிச்சயதார்த்த விழாவிற்கு, கல்யாணத்திற்கு, பண்டிக்கைக்கு இறைச்சி கிடைக்காதென்றால் அவை நின்று போகக்கூடும். தப்பியோடிவிட்ட எருமை மாட்டின் மீது ஒவ்வொருவருக்கும் இப்படியான பந்தம் இருக்கிறது; உரிமை இருக்கிறது; தேவை இருக்கிறது. அதைத் திரும்பவும் கொண்டுவந்தாக வேண்டும். வெட்டியாக வேண்டும்; உரித்துக் கறியாக்கிச் சாப்பிட்டாக வேண்டும். எருமை தப்பித்தலில் ஊரின் வாழ்வு சந்திக்கும் திடீர் நெருக்கடி.

நேரடியாக எருமை மாட்டின் மீது உரிமையோ பந்தமோ இல்லாதவர்களுக்கு அதன் ஓட்டமும் தப்பிக்கும் முயற்சியும் உண்டாக்கும் அழிவுகளால் பாதிப்பு. முட்டித்தள்ளிவிடும் பொருட்கள், கடைகள், சிதறடிக்கப்படும் பயிர்கள் என இன்னொருவிதமான நெருக்கடி. விலங்கொன்றைச் சுட்டுப் பிடிக்க அனுமதியளிக்காத ஜீவகாருண்ய சட்டத்தையும் காப்பாற்றவேண்டும்; எருமைமாடு தப்பித்ததால் உண்டாகியிருக்கும் சட்டம் ஒழுங்குப் பிரச்சினையும் சமாளிக்கவேண்டிய பிரச்சினை அரசு நிர்வாகத்திற்கு. இருவகை நெருக்கடியும் சேர்ந்து கிராமத்து ஆண்கள் ஒவ்வொருவரிடத்திலும் ஒருவித வேட்டைவெறியின் உணர்வை உண்டாக்க, எருமை மாட்டைப் பிடித்துக் கொல்லும் வேட்டைக்காரர்களாக மாறுகிறார்கள். உயிர் வாழ்வதற்காக ஓடும் எருமையின் மீது தீராப்பகை கொண்டவர்களாய் விரட்டுகிறார்கள்; ஓடுகிறார்கள்; முட்டித் தள்ளப்படுகிறார்கள்.

இதனைக் காட்சிப்படுத்தும்போது தன்னைக் காட்டிக் கொடுத்தவனைப் பலிவாங்கிவிடத் துடிக்கும் தனிமனிதக் குரோதங்களையும் உடல் திணவையும் உடமையாக்குதலின் வெறித்தனத்தையும் சில நிகழ்வுகள் வழியாகச் சொல்கிறார், இயக்குநர். தனக்குப் பாதிப்பில்லாத போது ஜீவகாருண்யம் பேசிவிட்டுத் தனது உடமைகளுக்குச் சேதம் விளையும்போது வெளிப்படும் கொலை நியாயங்கள் பேசும் போலித்தனமான மனிதர்களைச் சில உரையாடல் வழி காட்டுகிறார். மாட்டைப் பிடித்துவிடக்கூடை தனது வீரத்தைக் காட்டுவதற்கு முன்னால், தீர்த்துக்கொள்ளும் காமத்தையும், அதனை ஏற்றுக்கொள்ளும் பெண் உடலின் எதிர்பார்ப்பையும் காட்சிப்படுத்தியுள்ளார். இப்படிப் பலப்பலக் காட்சிகளைத் துண்டு துண்டாய்க்



காட்சிப்படுத்தியிருக்கிறார்கள், இயக்குநரும் ஒளிப்பதிவாளரும். ஒரு மலைக்கிராமத்தின் நிலவெளிப் பரப்பைப் படத்திற்கான வெளியாக்கிக் கொண்டு அதில் உயர்ந்து நிற்கும் மரங்கள், செடிகள், திட்டுகள், சரிவுகள், பள்ளங்கள், நீர்த்திட்டைகள் என ஒவ்வொன்றையும் காமிராவின் வழியாகப் படம் பிடித்திருக்கிறார்கள் என்று உணராத வகையில் நேர்க்காட்சியாகப் பார்க்கும் உணர்வைத் தரும்படி செய்யப்பட்டுள்ள ஒளிப்பதிவு அசாத்தியமானது, வேட்டைக்காக - தேடுதலுக்காக நெற்றியில் கட்டப்படும் விளக்கொளிகளின் கூட்டமும் அசைவுகளின் பாய்ச்சலும் உண்டாக்கும் பரபரப்பு படத்திற்கு அபாரமான வேகத்தை உண்டாக்கியுள்ளது. தேடல் நடந்து கொண்டிருக்கும்போது சில வீடுகளுக்குள் நடக்கும் உரையாடல்கள், காட்சிகள் எழுப்பும் கேள்விகளும் முக்கியமானவை.

ஒரு வீட்டிற்குள் வாழ்தலின் இறுதிக்கட்டத்தில் இருக்கும் முதியவரின் மூச்சிழுப்பின் தூரமும் அசைவும் திரும்பத் திரும்பக் காட்டப்படுகிறது. அவரது பார்வையில் படும் எருமையின் குறியீடு எல்லா மனிதர்களுக்கும் சாவின் அழைப்பு காத்திருக்கிறது என்பதையும் அதற்கு முன்னால் இவர்கள் காட்டும் உணர்ச்சிகளும் பிடிவாதங்களும் ஏன் என்பதைக் கோடி காட்டுவதுபோல மனித உடல்கள் ஒரு குவியலை உருவாக்குகின்றன. அதற்குள்ளிருந்து அந்த எருமையின் உடமையாளன் திமிறி எழுந்து தனது உரிமையை நிலைநாட்டிவிட முடியும் என எத்தணிக்கிறான். பெரியவரின் மூச்சிரைப்பும் மனிதக்குவியலால் உருவாகும் பிம்பத்திரட்சியும் மாறிமாறிக் காட்டப்படுவதோடு படம் முடிகிறது.

91 நிமிடம் ஓடும் பெல்லிசேரியின் ஜல்லிக்கட்டு படத்திற்கு கதையென்று எதுவும் இல்லை. ஆனால், கதையின் அடிப்படைக்கூறுகளான நிகழ்வுகள் இருக்கின்றன. ஒவ்வொரு நிகழ்வுக்கும் ஒரு தொடக்கும் முடிவும் இருக்கிறது. ஒவ்வொரு நிகழ்வையும் இணைக்கும் சங்கிலியாக எருமைமாடு மட்டுமே இருக்கிறது. படத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது உடனடியாக எனக்கு நினைவில் வந்தது யூஜின் அயனெஸ்கோவின் காண்டாமிருகம் (Rhinoceros/ Eugène Ionesco) நாடகம். இனவாதத்தையும் அரசதிகாரத்தையும் எள்ளலுடன் விமரிசிக்கும் காண்டாமிருகம் நாடகத்தின் உரையாடல்களும் விவாதங்களும் பொதுப்புத்திக்குள் உண்டாகும் அச்ச உணர்வின் பெருக்கத்தையும் பீதியின் வெளிப்பாடுகளையும் அதன் அதிகபட்ச எல்லைக்குள் நீட்டித்துப் பார்வையாளர்களைச் சிந்திக்கும்படி தூண்டியிருக்கும். அதைப்போலவே ஜல்லிக்கட்டு, சமகால இந்திய வாழ்க்கையில் பரவிவரும் கும்பல் மனோபாவத்தையும் செயல்பாடுகளையும் காட்சிப்படுத்தியிருக்கிறது.

படம் முடிந்த பிறகு, இன்னொரு கேள்வியும் எழுந்தது. மலையாளிகளின் உணவில் மாட்டிறைச்சி தவிர்க்க முடியாத உணவுப்பொருள். ஆனால் ஜல்லிக்கட்டு அவர்களின் முக்கிய வாழ்வியல் கூறோ, பண்பாட்டு அடையாளமோ அல்ல. படத்தின் மொத்த நிகழ்வுகளையும் எருமை மாட்டை இணைப்புச் சங்கிலியாகக்கொண்டு உருவாக்கப்பட்ட படத்திற்கு ஜல்லிக்கட்டு' 'ஏன் பெயரிட வேண்டும் என்பதுதான் அந்தக் கேள்வி. படம் பார்க்கும் தமிழ் மனத்திற்குள்ள இப்படியொரு கேள்வி எழுவதைத் தவிர்க்கவும் முடியாது. அந்தக் கேள்விக்கான விடையைத் தேடுவது இந்தப் படத்தின் விவாத எல்லையைக் குறுக்கிவிடுவதாகவும் எதிர்மறை நிலைபாட்டுக்கு நகர்த்துவதாகவும் ஆகக் கூடும். அதைத் தள்ளிவைத்துவிட்டுக் காட்சி இன்பத்தின் வழி ஆழமான கேள்விகளை எழுப்பியுள்ள படத்தைப் பார்த்துக் கொண்டாடுவதே முதல் தேவை. ●

"அ. ராமசாமி" <ramasamytamil@gmail.com>

# கு.ப.ராஜகோபலனின் சில கதைகள் குறித்து...



**டிசே தமிழன்**

இலையுதிர்க்காலகாலநிலை இன்னும் கொஞ்ச நாட்களில் வந்துவிடும். அதற்கும் முன் குளிர் நுழைந்துவிட்டது. இதுபோதாதென்று இன்று முழுவதும் மழையும் பெய்துகொண்டிருந்தது. சாம்பல் போர்த்திய வானத்தைப் பார்த்தபடி செம்மதுவை அருந்தியபோது ஒரு மென் கிறக்கம் வந்தது. இதுதான் வாசிப்பதற்கு அரியதருணமென கு.ப.ராஜகோபாலனின் சிறுகதைகளை எடுத்து வாசித்துப் பார்க்கத் தொடங்கினேன்.

கு.ப.ரா, புதுமைப்பித்தனைப் போல 42 வருடங்களே வாழ்ந்தவர். புதுமைப்பித்தனைப் போல இருபது வயதுகளில் எழுதத்தொடங்காது, தனது முப்பது வயதின் பின்னேயே எழுதத் தொடங்குகின்றகு.ப.ரா,பத்தாண்டுகளுக்குள்90க்கும் மேற்பட்ட சிறுகதைகளை எழுதியிருக்கின்றார். அவர் இலக்கியத்துக்கு வந்ததுகூட ஒருவகையில் ஒரு விபத்துப் போலத்தான் தெரிகிறது. கு.ப.ராவுக்கு 32 வயதில் பார்வை முற்றாக, புரையின் காரணமாக இல்லாமற் போக, அவர் அதுவரை செய்துவந்த வேலையை இழக்கின்றார். பிற்காலத்தில் பார்வையைப் பெறுகின்றபோதும் அவரால் முன்பு இழந்த அரசாங்கவேலையை மீளப் பெறமுடியவில்லை. பிறகான காலங்களில் பத்திரிகையாசிரியாரகவும்நூல் விற்பனையாளராகவும் இருந்திருக்கின்றார்.

கு.ப.ராவும்புதுமைப்பித்தனும்சமகாலத்தவர்கள். புதுமைப்பித்தன் தனது காலத்தில் பல்வேறு பரிசோதனை முயற்சிகளைச் செய்தபோது, கு.ப.ரா. ஆண்/பெண் உறவுகளில் இன்னுமின்னும் ஆழமாகப் போய்ப் பார்த்தவர். எனினும், கு.ப.ராவால் பாலியல் உறவுகளில், தன் காலத்தைய நம்பிக்கைகளை மீறிப் போக முடியவில்லை. அதை அவருக்கு அடுத்த காலப்பகுதியில் வந்த தி.ஜானகிராமன் எளிதாக உடைத்தெறிந்து போகின்றார்.

எழுதுபவர்கள் மற்றவர்களின் கதைகளைச் சொல்ல எடுத்துக்கொண்ட அளவுக்கு,தம்மோடு தொடர்புடைய/சார்ந்த கதைகளை எழுதுவது குறைவு எனச் சொல்லலாம். கு.ப.ராவின் பல கதைகளில் எழுத்தாளர் என்ற பாத்திரம் தொடர்ந்து வருகின்றது. 'பெண்மனம்' கதையில் எழுதுபவனின் மனைவியை அவளதுதோழி சந்திக்கவருகின்றாள். எழுத்தாளருக்கு அந்தத் தோழி மீது ஒருவகையான மையல் வருகின்றது. தோழிகள் கதைத்துக் கொண்டிருக்கும்போது அடிக்கடி ஏதாவது காரணம் சொல்லி அவர்களின் கதைகளுக்குள் நுழைந்துவிடுகின்றார். எழுத்தாளனின் மனைவிக்கோ தனது கணவனின் சலனங்கள் விளங்குகின்றது. அதேசமயம் தனது தோழி இதை அறியமுன்னர் அவளை அங்கிருந்தும் அனுப்பிவிடுகின்றார். இப்படிக் கணவனின் கள்ளத்தனத்தைக் கண்டு வெகுண்டு/ எரிச்சல் அடைந்தாலும், இறுதியில் தனது கணவனை இனியும் அவமானப்படுத்தகூடாதென்று மனம் அந்தப் பெண்ணுக்கு இரங்குகின்றது.

அதேபோல இன்னொரு கதையான 'எதிரொலி'யும், ஒரு எழுத்தாளனுக்கும் அருகில் வசிக்கும் மணமான பெண்ணுக்கும் வரும் சிறு சபலத்தைப் பற்றியதாகும். எழுத்தாளனின் மனைவி ஏதோ ஒரு காரணத்தால் அவளின் ஊருக்குப் போய் சில மாதங்களாகிவிட்டது. எழுத்தாளனுக்கு சுகவீனம் வர, பக்கத்து வீட்டுப்பெண்மணி சாப்பாடு கொடுத்து அருகிலிருந்து கவனித்துக்கொள்கின்றார். ஒருமுறை அந்தப் பெண்ணின் கரத்தை வேட்கையின் நிமித்தம் இவர் இழுக்கின்றார். அந்தச் சம்பவம் இந்தச் சிறுகதையில் பிறகு மூன்றுவிதமான பகுதிகளில் சொல்லப்படுகின்றது. முதலில் அந்தப் பெண்ணின் பார்வையில். இரண்டாவது எழுத்தாளனின் பார்வையில். மூன்றாவது அந்த எழுத்தாளனின் மனைவியின் பார்வையில்.

பெண்ணின் பார்வையில் சொல்லப்படும்போது அவர் தற்செயலாகத் தனது கரத்தைத் தொட்டிருக்கலாம், தானும் அது சகோதரப் பாசமென சும்மா விட்டிருக்கலாம்; ஆனால், கையை உதறிவிட்டு ஓடிவந்துவிட்டதன் பேரில், அவர் மீது எனக்கு ஏதோ மையல் இருக்கின்றதெனக் காட்டிவிட்டேனே எனக் கவலைப்படுவதாகச் சொல்லப்படுகின்றது.

எழுத்தாளனின் பார்வையில், சுகவீனமாக நேரத்தில் இவ்வளவு செய்து தந்த, என் எழுத்துக்களின் மீதும் விருப்புக்கொண்ட பெண் மீது, என் ஆசையால் என்றென்றைக்குமாய் அவளை விலத்திச் செய்துவிட்டேனே; இந்த மூன்று மாதங்களாய் அவளோடு ஒரு மானசீகக் காதல் இருந்து நிறைய எழுதிக் குவித்தேனே. இனி அவளும் அருகில் வரப்போவதில்லை, இனியெப்படி எழுதுவேன் எனத் தவிப்பதாய்ச் சொல்லப்படுகிறது.



மூன்றாவது பகுதியில் எழுத்தாளரின் மனைவி திரும்பி இவரிடம் வரும்போது, எழுத்தாளர் இந்த வீட்டில் இருக்கவேண்டாமென வேறொரு இடத்துக்கு வாடகைக்கு மனைவியுடன் போகின்றார். மனைவிக்கு இந்த விடயம் தெரியாது என்றுதான் நினைக்கின்றார். ஆனால், அங்கே வீட்டு வேலை செய்யும் பெண், எழுத்தாளனின் மனைவியிடம், இவருக்கு பக்கத்து வீட்டுப் பெண்ணில் சபலம் இருந்ததைச் சொல்லிவிடுகின்றார். இப்போது மனைவியும், இனி உன்னோடு இருக்கமுடியாது ஊருக்குப் போகப்போகின்றேன் என்கின்றாள். இவரும் சரி நீ போ என்பதோடு கதை முடிகின்றது.

இந்தக் கதையை வாசித்தபோது மலையாள எழுத்தாளர் சுள்ளிக்காடு பாலசச்ந்திரன் தனது சுயசரிதையில், அவரின் வீட்டுக்கு சோப்பு விற்க வரும் பெண்ணை, அவரின் மனைவி இல்லாத சமயத்தில், அந்தப்பெண்ணின் மீது மையல் கொண்டு பெண்ணின் கையைப் பிடித்த சம்பவம் பற்றி எழுதியது நினைவுக்கு வந்தது. எல்லாப் படைப்பாளிகளுக்கும் சபலம் அடைகின்ற, தங்கள் தன்னிலைகளை இழக்கின்ற தருணங்கள் வரத்தான் செய்கின்றன. அதை எப்படிக் கடந்தனர்/கடக்கின்றனர் என்பதைப் பார்ப்பதும் ஒருவகையில் சுவாரசியமானதுதான்.

இந்தச் சலனங்களை ‘காதல் நிலை’ என்ற கதையில் ஆண்/பெண் பாத்திரங்கள் ஒரு தத்துவார்த்த சூழ்நிலையை உருவாக்கிக் கடந்து செல்கின்றன. எம்.ஏ. படிக்கும் மிஸல் நவமணிக்கு ஷேக்ஷ்பியரின் ‘அந்தோனியும் கிளியோபாத்ராவும்‘ வாசித்துவிட்டு, என்ன அற்புதமான காதல் அது என்கின்றாள். அதை மறுத்து அவளின் ஆசிரியரான சுந்தரம், காதல் என்பது ஒருபோதும் நிரந்தரமான மகிழ்ச்சியைக் கொடுப்பதில்லை. சிறந்த காதல் எனச்சொல்லப்பட்ட அனைத்திலுமே காதலர்கள் இறந்திருக்கின்றார்களென ரோமியோ-ஜூலியட்டும், பார்பிரியாவும் அவர் காதலனும் அப்படித்தான் இறந்துபோனார்கள் என உதாரணங்களை சுந்தரம் காட்டுகின்றார். நவமணியோ நிரந்தரக் காதல் பற்றி, கணவனும் பெண்ணும் ஒருமனப்பட்டால் காதல் ஏன் வளராது என விவாதிக்கின்றார்.

‘ஒருமனப்பட்டால் என்றால் என்ன, ஒன்று மற்றொன்றில் லயப்படுவதுதானே. அப்படியெனில் ஒன்று மற்றொன்றுக்குப்

பரிபூர்ணமாகக் கீழ்ப்படிவதுதானே' என்கின்றார் சுந்தரம். 'சிறியது பெரியதற்கு இடங்கொடுத்து அதில் ஈடுபடுவதுதானே' என்று சொல்லும் நவமணியை, 'ஆராய்ந்து பார்த்தால் சிறியது என்ன பெரியது என்ன? அபிப்பிராயப் பேதமாகத்தான் கடைசியில் முடிகிறது' என்று சொல்லும் சுந்தரம், கல்யாணம் ஆகிற நிமிஷமே காதல் முடிகிறதென உறுதிப்படச் சொல்கிறார்.




'என் மணவாழ்க்கை சாவுநிலைக்கு சமானந்தான்' என ஒப்புக்கொள்கின்ற நவமணி, சுந்தரத்திடம், 'உங்கள் வாழ்க்கையில் காதலைக் கண்டிருக்கின்றீர்களா?' எனக் கேட்கின்றார். சுந்தரம் சுற்றிவளைத்துக் கதைத்தாலும் இறுதியில் தனக்கு நவமணியோடு ஒரு காதல் இருக்கிறதென்பதை ஒப்புக்கொள்கின்றார். ஆனால், இவ்வாறான நிலையில் எவரையும் பாதிக்காது அவரவர் இயல்பில் இருக்கும் இந்தக் காதலே போதும் என்கின்றார். இதைத் தாண்டிப் போனால் அது சலித்துவிடும்.கீட்ஸின், 'வாலிபனே, எந்நாளும் காதலித்துக் கொண்டிருப்பாய்; அவளும் அப்படியே அழகுருவாக இருப்பாள்' என்பதே தன் காதலின் வாக்குமூலம் என்கிறார்.

'இதற்கு மேல் காதல் போகக்கூடாது என்கின்றீர்கள். உடல்களைப் பகிர்ந்தாலும் அது அலுத்துப் போய்விடும் என்கின்றீர்கள். அப்படியாயின் இந்த வாழ்க்கை என்பதுதான் என்ன' என நவமணி கேட்கின்றார். 'சுகதுக்கம் கலந்த அனுபவந்தான்; வேறொன்றும் இல்லை' என சுந்தரம் சொல்வதுடன் இந்தக் கதை முடிகின்றது.

இதேபோன்று இன்னொரு கதையான 'திரை'யில், ஒருவன் தன் காதலியின் உருக்கமான காதல் கடிதங்களின் நிமித்தம் அவளைச் சந்திக்க வருகின்றான். ஆனால், வீணை நன்றாக வாசிக்கின்ற, கணவனை இழந்த ராஜத்தின் சகோதரி சரஸ்வதிதான் இந்த காதல் கடிதங்களை எழுதியிருப்பதை, அந்த ஆண் பின்னர் கண்டுபிடிக்கின்றான். சரஸ்வதிக்கு அவன் மீது மையலிருந்தாலும், கணவனை இழந்த அவளால் தன் தாபத்தை இப்படி மறைமுகமாகச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை. இறுதியில் வீட்டிலிருந்தவர்கள் மீண்டும் வர, 'அந்தத் திரை மீண்டும் மூடிற்று. ஆனால், திரை என்ன அறியும்' என்பதாக அந்தக் கதை முடியும்.

கு.ப.ரா பிற்காலத்தில் எழுதிய 'மோகினி மாயை' கதையில், இரண்டாந்தாரமாக வந்த ஒரு பெண்ணுக்கு அவளை விட பத்துவயதான இளைஞன் மீது மையல் வருகின்றது. இருவரும் அடுத்த கட்டத்திற்குள் நுழையமுன்னர். எப்படியோ இந்த தாபத்திலிருந்து தப்பிவிடுகின்றனர். பிறகு அந்தப் பெண் தனது வயதொத்தவளுடன் இதைப் பகிரும்போது அவளும் தனக்கு அப்படி ஒரு மையல் வயது குறைந்த பையனோடு வந்தது என்கின்றாள். ஆனால், இதற்கு மேல் அது போகப்போவதில்லை, ஆகவே இவ்வாறாகவேனும் நடந்ததே, அதை இரசித்து மகிழ்ந்திருக்கவேண்டியதுதான் என இருவரும் சமாதானம் செய்து கொள்கின்றார்கள்.

ஏலவே குறிப்பிட்டமாதிரி, கு.ப.ராவுக்கு ஆண்/பெண் உறவின் பல்வேறு சிக்கல்கள் புரிகின்றது. அதைத் தெளிவாக முன்வைக்கவும் செய்கின்றார். ஆனால், அவரால் அந்தக் காலகட்டத்து நம்பிக்கைகளைத் தாண்டிப்போக அவரது 'வைதீக' மனம் விடாததால் அத்தோடு தேங்கியும் விடுகின்றார். அதை வாசிக்கும் நாம் கு.ப.ராவின் பலவீனமாக இதைப் பார்க்காது, கதைகள் எழுதப்பட்ட காலத்தின் மீது ஏற்றி வைத்துப் பார்க்கும்போது அதையும் ஏற்று, கு.ப.ராவின் கதைகளை இரசிக்க முடிகின்றது.

அதேவேளை புதுமைப்பித்தன் மரபுகளை உடைத்தும்,கேலிசெய்ததும்போலவன்றி,கு.ப.ராவுக்குள் நிறைய மரபார்ந்த பார்வைகளும் இருப்பதைப் பார்க்கமுடியும். அபார்ஷன் பற்றியெல்லாம் மிக பிற்போக்குத்தனமாய் கு.ப.ரா எழுதியிருக்கின்றார். ஆனால், அந்தக் கதைகளினூடும் பெண்களின் உறுதிப்பாடுகளையும் அவ்வப்போது அவர் எழுதிவிடுகின்றார்.

'இயற்கையின் வெற்றி' கதையில் ஒரு பெண், அபார்ஷனுக்கு எதிராகத் தன் கணவன் கதைக்கின்றான் என்பதற்காகவே வீட்டை விட்டு வெளியேறுகின்றாள். பிறகு, வழமைபோல அந்தக் கதை கு.ப.ராவின் வைதீக மரபுக்குள் முடிந்துபோனாலும், 1930களிலேயே ஒரு பெண் அபார்ஷனுக்காய் விவாதம் செய்து, தனது கொள்கைக்காக கணவனை உதறித்தள்ளி வருகின்றாள் என்பது பாராட்டவேண்டியதுதான்.

அதுபோல பலவற்றை மறுவாசிப்புச் செய்கின்றேன் என்றபேரில் 'ஆமிரபாலி' என்ற மோசமான கதையையும் கு.ப.ரா எழுதியிருக்கின்றார். அன்று மிகப் பிரபல்யம் வாய்ந்த 'தாசியான' ஆமிரபாலி, புத்தர் ஞானம் பெற்று நாட்டுக்குள் திரும்பும்போது, அவரைச் சந்தித்து பாதபூசை செய்ய விரும்புகின்றார். புத்தர் மற்றவர்களின் விருப்புக்கும் மாறாக ஆமிரபாலியைச் சந்திக்க தயார் என்கின்றார். அடுத்தநாள் காலையில் ஆமிரபாலி, புத்தரைச் சந்திக்க ஏற்பாடுகளைப் பிறர் செய்யும்போது, இரவில் தூக்கமற்றிருக்கும் புத்தர் எவரும் அறியாமல் ஆமிரபாலியைச்விடிகாலை புலரமுன்னரே சந்திக்கச் செல்கின்றார். புத்தரின் வருகையைக் கண்ட ஆமிரபாலி பாதபூசை செய்ய முயல்கின்றபோது அதை மறுத்து எனக்கு பிட்ஸை இடு என்கின்றார் புத்தர். இங்கே பிட்ஸை என்று எதை கு.ப.ரா குறிப்பிடுகின்றார் என்பது நமக்குப் புரிகிறது. ஆசையைத் துறந்த புத்தனால் கூட ஆமிரபாலியின் முன் தனது ஆசையைத் துறக்கமுடியவில்லை என்று விளங்கினாலும், பிற கதைகளில் தனக்கான மரபுகளை உதறித்தள்ள முடியாது தடுமாறும் கு.ப.ரா,புத்தரின் அற்புதமானசீடராக மாறிய ஆமிரபாலியையும்,புத்தரையும்இப்படிகீழிறக்கியிருக்கத் தேவையில்லை.அப்படி ஆசையிருந்து புத்தர், ஆமிரபாலியுடன் கூடினாலும் அவரின் தெளிவுற்ற பிரக்ஞையுடந்தான் கலந்திருப்பார் என்பதை புத்தரை அறிந்தோர் அறிவோம்.

கு.ப.ரா சமகாலத்தை எழுதிய அளவுக்கு நிறைய வரலாற்றுக் கதைகளையும் எழுதியிருக்கின்றார். அவர் உயிரோடு இருந்த காலத்தில் வந்த மூன்று சிறுகதைத் தொகுப்புக்களில் ஒரு தொகுப்பு முழுதும் அரச/வரலாற்றுக்கதைகளை மட்டுமே உள்ளடக்கியிருக்கின்றார். புதுமைப்பித்தன் நூற்றுக்கு மேற்பட்ட கதைகளை எழுதியிருந்தாலும், அவரது நல்ல கதைகள் ஐம்பதுக்கும் குறைவாகவே இருக்கும். பலவற்றைப் பரிசோதனைக்கதைகளாக, கட்டுரைக்கு அண்மையாக நின்று எழுதியிருக்கின்றாரெனவே புதுமைப்பித்தனைக் கொள்வேன்.

தமிழ்ச்சிறுகதை மேலெழத் தொடங்குகின்ற காலத்தில் புதுமைப்பித்தனும் கு.ப.ராவும் எழுதியவை இன்றும் -80 ஆண்டுகள் கடந்தபின்னும்- உயிர்த்திருக்கின்றன என்பது குறித்து எந்தமாற்றுக் கருத்துக்களுமில்லை. ஆனால், புதுமைப்பித்தன் எழுதிய எல்லாமே உயர்ந்தவை என்று அவரைத் திருவுருவாக்கும்போது மட்டும், அதே காலத்தில் கு.ப.ராவும் சற்றுப் பிந்தி கு.அழகிரிசாமி போன்றவர்களும் புதுமைப்பித்தன் ஏறிய அதே சிகரத்தில்இல்லாவிட்டாலும்இன்னொருமலையில்ஏறி தமிழ்ச்சிறுகதை உலகைப் பார்த்தவர்கள் என்பதையும் நாம் தெளிவாகக் குறிப்பிட்டாகவேண்டும். ●

"டிசேதமிழன்" <elanko@rogers.com>

---

கு.ப.ரா. சிறுகதைகள் (முழுத் தொகுப்பு); பதிப்பாசிரியர்: பெருமாள் முருகன்; விலை ரூ. 495; வெளியீடு; காலச்சுவடு பதிப்பகம், 669 கே.பி. சாலை, நாகர்கோவில் - 629 001; தொலைபேசி: 91-4652-278525; மின்னஞ்சல்: nagercoil@kalachuvadu.com



பாவண்ணன்

## கே.சுவாமிநாதன்

# எப்போதும் இருக்கும் பெயர்

காந்தியடிகள், 1915ஆம் ஆண்டில் தன்மனைவி கஸ்தூர்பாவுடன் சென்னைக்கு வந்திருந்தார். அப்போது தென்னாப்பிரிக்காவில் நடைபெற்று வந்த இந்தியர்களின் உரிமைப்போராட்டத்துக்கு ஆதரவு திரட்டுவது அவருடைய நோக்கமாக இருந்தது. அவரை 'இந்தியன் ரிவ்யு' பத்திரிகையின் ஆசிரியரான ஜி.ஏ.நடேசன் ரயில் நிலையத்துக்கே வந்து வரவேற்று அழைத்துச்சென்று தம் வீட்டிலேயே விருந்தினராகத் தங்கவைத்திருந்தார். ஆர்வத்துடன் அவரைக் காண்பதற்காக ஏராளமான கல்லூரி மாணவர்கள் ரயில்நிலையத்துக்கே வந்திருந்தார்கள்.

அப்போது காந்தியடிகளுக்கு உதவியாக இருக்கும்படி ஓர் இளைஞரைக் கேட்டுக்கொண்டார் நடேசன். சென்னை நகருக்குள் ரானடே கூடம், கோகலே மன்றம், மதராஸ் மகாஜன சபா, சாந்தோமில் இருந்த கத்தோலிக்கப் பாதிரியாரின் வீடு, மைலாப்பூர், ஜார்ஜ், ராயப்பேட்டை என காந்தியடிகள் செல்ல விரும்பிய இடங்களுக்கு நடந்தோ அல்லது டிராமிலோ பாதுகாப்பாக அழைத்துச்சென்று அவருக்குத் தேவையான உதவிகளைச் செய்து, திரும்பவும் வீட்டுக்கு அழைத்துவருவது முக்கியமான வேலை. பிறகு வீட்டுக்குள் கடிதம் எழுதஅவர் அமரும்போது, அவர் இறகுப் பேனாவைத் தொட்டு எழுத வசதியாக மைப்புட்டியில் சுதேசி மையை நிரப்பியளிப்பது அடுத்த வேலை. பதினெட்டு வயதே நிரம்பிய அந்த இளைஞர் காந்தியடிகளுக்கு அந்த உதவிகளை மிகவும் அன்புடனும் ஆர்வமுடனும் செய்தார். அவர் பெயர் கே.சுவாமிநாதன்.

ஐந்தாண்டுகள் கழித்து காந்தியடிகள் மீண்டும் சென்னைக்கு வந்திருந்தார். ஆப்பிரிக்கப்பணிகளை முடித்துவிட்டு அவர் இந்தியாவுக்குத் திரும்பியிருந்த நேரம் அது. ஒத்துழையாமை இயக்கத்தையும் தொடங்கியிருந்தார். காந்தியடிகளுக்கு உதவி செய்ய வழக்கம்போல சென்றிருந்தார் சுவாமிநாதன். அவரோடு மேலும் சில இளைஞர்களும் இணைந்து உதவி செய்தனர். அப்போது ஆசிரமத்திலேயே தங்கி காந்தியடிகளுக்குத் துணையாக இருக்கும் வகையில் சில உதவியாளர்கள் தேவைப்பட்டார்கள். அதற்காக தன்னைக் காண வந்திருந்த இளைஞர்களிடம் ஒரு சிறிய நேர்காணலை நிகழ்த்தினார் காந்தியடிகள். ஆசிரமச்சேவையில் ஆர்வமிருக்கிறதா, பெற்றோர்கள் இசைவளிப்பார்களா, சகோதரசகோதரிகள் இருக்கிறார்களா,பெற்றோர்களையோ மற்றவர்களையோ அருகிலிருந்து கவனித்துக்கொள்ளும் பொறுப்பு இருக்கிறதா, வாழ்நாள் முழுவதும் சேவையைத் தொடரமுடியுமா என்பதுபோன்ற சில கேள்விகள் அனைவரிடமும் கேட்கப்பட்டன.சுவாமிநாதன் அனைத்துக் கேள்விகளுக்கும் ஆர்வமுடன் பதில் சொன்னார். இளைஞர்கள் காட்டிய ஆர்வம், அணுகுமுறை, மதிக்கூர்மை, நுட்பமான கவனிப்பு, குடும்பப்பின்னணி, கடமைகள் என அனைத்து அம்சங்களையும் தொகுத்துப் பரிசீலனை செய்தபிறகு, நேர்காணலின் இறுதியில் சந்தானம், வரதாச்சாரி என இருவரை மட்டும் காந்தியடிகள் தேர்ந்தெடுத்தார். சுவாமிநாதன் தேர்ந்தெடுக்கப்படவில்லை.

முடிவில், சுவாமிநாதனை அருகில் அழைத்த காந்தியடிகள், "உன்னைஎனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஆனால், உன்னை ஆசிரமத்துக்கு அழைத்துச் செல்வதற்குரிய சரியான நேரம் இன்னும் வரவில்லை. உன்னிடம் ஒப்படைக்க என்னிடம் ஒரு வேலை இருக்கிறது. இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திரு. தக்க நேரத்தில் உன்னை அழைப்பேன். அப்போது வருவதற்குத் தயாராக இரு" என்று சொல்லித் தட்டிக்கொடுத்தார். சுவாமிநாதனும் புன்னகையுடன் தலையசைத்து அவருக்கு விடையளித்தார். ஆனால், காந்தியடிகள் மறைவுவரை சுவாமிநாதன் எதிர்பார்த்திருந்த அழைப்பு வரவேயில்லை.

30.01.1948 அன்று காந்தியடிகள் துப்பாக்கிக்

குண்டுக்கு இரையாகி உயிர்நீத்தார். அவர் மறைந்த பிறகு அவருடைய கட்டுரைகளையும் பேச்சுகளையும் கடிதங்களையும் குறிப்புகளையும் தொகுக்கும் வேலையில் அரசு 1956ஆம் ஆண்டில் ஈடுபட்டது. முதலில் ஜே.சி.குமரப்பாவின் தம்பியான பரதன் குமரப்பாவிடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. எதிர்பாராதவிதமாக அடுத்த ஆண்டிலேயே அவர் இந்த மண்ணுலகைவிட்டு மறைந்துவிட்டார். அதைத்தொடர்ந்து ஜெய்ராம் தௌலத்ராம் என்பவரிடம் அப்பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. பற்பல காரணங்களால் இரு ஆண்டுகளுக்குப் பிறகு அவரும் அப்பொறுப்பிலிருந்து விலகிக்கொண்டார். அதுவரை தொகுக்கப்பட்ட செய்திகளிலிருந்து மூன்று தொகுதிகள் மட்டுமே வெளிவந்திருந்தன.

இறுதியாக அந்த வாய்ப்பு சுவாமிநாதனைத் தேடி வந்தது.அக்கணத்தில், "இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திரு. தக்க நேரத்தில் உன்னை அழைப்பேன்" என்று தன் இளமைக்காலத்தில் காந்தியடிகள் சொல்லிவிட்டுச் சென்ற சொற்கள் அவர் நெஞ்சில் அலைமோதின. அந்த அழைப்பை காந்தியடிகள் விடுத்த அழைப்பாகவே அவர் எடுத்துக்கொண்டார். உடனே அப்பொறுப்பை ஏற்றுக்கொண்டு அவர் தில்லிக்குச் சென்றார். அப்போது அவருக்கு வயது 63.

அரசியல் செயல்பாடுகளில் ஈடுபடாதவர் என்றபோதும் எளிமை, நேர்மை, அர்ப்பணிப்புணர்வு,சாதிமதங்களின் அடிப்படையில் மனிதர்களிடையில் வேறுபாடு பாராமை, எதிர்ப்பைக் கண்டு அஞ்சாமை என காந்தியடிகள் வலியுறுத்தும் பல குணங்களைக் கொண்டவர் சுவாமிநாதன். இளம்வயதில் பிரசிடென்சி கல்லூரியில் பட்டப்படிப்பை முடித்த பிறகு இங்கிலாந்துக்குச் சென்று ஆட்சியர் பணிக்குரிய தேர்வை எழுதவேண்டும் என்பதுதான் அவருடைய தொடக்கக்கால எண்ணமாக இருந்தது. ஆனால், அவர் தாயார் அம்முயற்சியைத் தடுத்துவிட்டதால் சட்டப் படிப்பைப் படித்தார். இரண்டாண்டு படிப்புக்குப் பிறகு புகழ்பெற்ற வழக்கறிஞரான சீனிவாச ஐயங்காரிடம் பயிற்சி வழக்கறிஞராகப் பணிபுரிந்தார். அதைத் தொடர்ந்து சொந்த ஊரான புதுக்கோட்டைக்குச் சென்று வழக்கறிஞராக பணியாற்றத் தொடங்கினார்.

அப்போது தேசபக்தர் சத்தியமூர்த்தியின் தலைமையில் புதுக்கோட்டையில் அரசருக்கு எதிராக வேலைநிறுத்தமும் மறியலும் நடந்தன. அவற்றில் சுவாமிநாதன் கலந்துகொண்டார். மேலும், வழக்கறிஞர் மன்றத்துக்கு மற்றொரு தேசபக்தரான காமராஜரை அழைத்து உரையாற்றவைத்தார். இச்செயல்பாடுகளால் ஆங்கில அரசின் கண்காணிப்பு வளையத்துக்குள் அவர் விழநேர்ந்தது. அரசு அதிகாரிகள் அவரை நேரடியாகவே அழைத்துக் கண்டித்தார்கள். தன் செயலுக்கு மன்னிப்பு தெரிவித்து கடிதம் எழுதியளிக்கவேண்டும் என்று கட்டாயப்படுத்தினார்கள். ஒருவேளை அதற்கு மறுத்தால் வழக்கறிஞராகப் பணியாற்றுவதற்காக வழங்கப்பட்ட உரிமையை ரத்து செய்துவிடுவதாகவும் தெரிவித்தார்கள். மன்னிப்புக்கடிதம் அளிக்க மறுத்த சுவாமிநாதன் வழக்கறிஞர் தொழிலையே துறந்தார்.

அத்தருணத்தில், நல்வாய்ப்பாக வழக்கறிஞராக பணியாற்றிய காலத்தில் வழக்குமன்றவாடிக்கையாளராக இருந்த அண்ணாமலை செட்டியார், சிதம்பரத்தில் தான் தொடங்கி நடத்திவந்த ஸ்ரீமீனாட்சி கல்லூரியில் சுவாமிநாதனுக்கு ஆங்கில ஆசிரியர் வேலையை அளித்தார். அதுமட்டுமன்றி ஆங்கில இலக்கியத்தில் அவர் மேற்படிப்பைப் படிப்பதற்காக ஆக்ஸ்ஃபோர்டுக்கும் அனுப்பிவைத்தார். அங்கு பட்டம் வாங்கித் திரும்பிவந்து மீண்டும் கல்லூரியிலேயே 1930 வரை பணியைத் தொடர்ந்தார் சுவாமிநாதன். அப்போது அக்கல்லூரியின் முதல்வராக பணியாற்றியவர் வரலாற்றாய்வாளரான கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி. அதைத் தொடர்ந்து சென்னையில் உள்ள பிரசிடென்சி கல்லூரியில் பேராசிரியராக இணைந்து பதினெட்டு ஆண்டுகள் பணியாற்றினார்.

'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் நாடெங்கும் வேகமாகப் பரவிய நேரத்தில் ஏராளமான கல்லூரி மாணவர்களும் அப்போராட்டத்தில் பங்கெடுத்தனர். ஆங்கிலேய அரசின் நிர்வாகத்தின்கீழ் செயல்பட்டுக்கொண்டிருந்த பிரசிடென்சி கல்லூரியின் மாணவர்களும் மறியலில் ஈடுபட்டனர். அப்போது கல்லூரி முதல்வருக்கு உதவியாக இருந்த சுவாமிநாதன் இரு தரப்பிடமும் உரையாடி எவ்விதமான அசம்பாவிதங்களும் நேராதபடி பார்த்துக்கொண்டார். மாணவர்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்கவேண்டும் என நிர்வாகத்துக்கும், ஒரே ஒரு விழுக்காடு அளவுகூட வன்முறைக்கு இடமளிக்காமல் அமைதியான முறையில் மட்டுமே எதிர்ப்பை வெளிப்படுத்தவேண்டுமென மாணவர்களுக்கும் எடுத்துரைத்துப் புரியவைத்து, இரு தரப்பினரிடையேயும் சமரசம் நிலவுவதற்கு உதவினார்.

பின்னர், 1948 முதல் 1953 வரை அரசு முகம்மதியக்கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார். அதைத் தொடர்ந்து 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஆங்கில இதழில் துணையாசிரியராக 1953 முதல் 1959 வரை பணியாற்றினார். அப்போது ராஜாஜியின் 'சக்கரவர்த்தி திருமகள்' புத்தகத்தையும் வினோபாவின் கீதைப் பேருரைகள் புத்தகத்தையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

இதற்குப் பிறகே காந்தி நூல்களைத் தொகுக்கும் குழுவின் தலைமைத் தொகுப்பாசிரியராக பணியில் அமர்ந்தார் சுவாமிநாதன். அப்போது தகவல் ஒளிபரப்புத்துறையின் அமைச்சராக இருந்தவர் பி.வி.கெஸ்கர். ஆலோசனைக்குழுவின் தலைமைப்பொறுப்பு மொரார்ஜி தேசாயிடம் இருந்தது. இந்தி மொழியோ குஜராத்தி மொழியோ தெரியாத ஒருவர் இத்தொகுப்பு வேலையை எப்படிச் செய்யமுடியும் என்னும் ஐயத்தை நேரிடையாகவே சுவாமிநாதனிடம் வெளிப்படுத்தினார் தேசாய்.

வைணவத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த சுவாமிநாதன் ஆழ்வார்களின் வரிசையைச் சேர்ந்தவராகவே காந்தியடிகளைக் கருதினார். தூய்மையான பக்தியையே தன் வழியாகக் கொண்ட ஆழ்வார்களைப்போல தூய்மையும் உண்மையும் மிக்க சேவையையே தன் வழியாகக் கொண்டவர் காந்தியடிகள் என்பது அவர் கருத்து.

தன்மனத்தில் தோன்றிய எண்ணத்தையே தேசாயின் கேள்விக்குப் பதிலாகச் சொன்னார் சுவாமிநாதன். “எனக்கு உங்களைப்பற்றி எதுவும் தெரியாது. ஆனால், நான் நம்பிக்கை வைத்திருக்கும் ஆளுமைகள் உங்கள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அதனால் நானும் நம்புகிறேன். நீங்கள் உங்கள் பணியைத் தொடங்கலாம்” என்று சொல்லி அனுப்பிவைத்தார் தேசாய்.

சம்பளமாக எதையும் பெறாமலேயே தொகுப்பாசிரியராகப் பணியாற்றவேண்டும் என்பதே சுவாமிநாதனின் விருப்பமாக இருந்தது. அதைத் தேசாயிடம் தெரிவிக்கவும் செய்தார். தேசாய் சில கணங்கள் மௌனமாக அவரையே உற்றுப் பார்த்தார். அக்கணமே தொகுப்புவேலையைச் செய்ய சுவாமிநாதனே பொருத்தமானவர் என்பதில் அவருக்கு உறுதி ஏற்பட்டுவிட்டது.புன்னகையுடன் சுவாமிநாதனைப் பார்த்து, “அப்படி ஒருவருடைய உழைப்பை இலவசமாகப் பெற்றுக்கொள்ள விதி இல்லை” என்று மறுத்தார் தேசாய். மேலும், “உங்களுடைய உழைப்புக்கு ஊதியமாக நினைத்துக்கொள்ளவேண்டாம். வீட்டிலிருந்து அலுவலகத்துக்கு வந்துபோகும் செலவுக்குத் தேவையான பணத்தைப் பெற்றுக்கொள்வதாக நினைத்துக்கொள்ளுங்கள்” என்றார். மாதச்செலவாக 720 ரூபாய் வழங்கவேண்டும் என முடிவானது. இறுதியில் சுவாமிநாதன் அதை ஏற்றுக்கொண்டார்.

உலக அளவில் அதுவரை கார்ல் மார்க்ஸ், லெனின், மார்டின் லூதர்கிங் போன்ற ஒருசில ஆளுமைகளுடைய ஆக்கங்கள் மட்டுமே தொகைநூல்களாக வெளிவந்திருந்தன. இந்தியாவில் அப்படிப்பட்ட முயற்சி காந்தியடிகளின் தொகைநூல் வரிசையிலிருந்தே தொடங்குகிறது. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் அவர் எழுதிய கடிதங்கள், கட்டுரைகள், பத்திரிகைக்குறிப்புகள், நிகழ்த்திய உரைகள், நேர்காணல்கள் எனஅனைத்தையும் கால்வரிசைப்படுத்துவது என்பது எளிதான வேலையல்ல. காந்தியடிகளுடன் கடிதத்தொடர்பில் இருந்தவர்கள் உலகெங்கும் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்களைத் தொடர்புகொண்டு அவற்றைப் பெற முயற்சி செய்வது முக்கியமான பணி. காந்தியடிகளிடன் கட்டுரைகள் உலகநாடுகளில் பல இதழ்களில் தொடர்ச்சியாக வெளிவந்தன. அவற்றையும் ஒன்றுவிடாமல் சேகரிக்கவேண்டும்.

இறுதியாக இந்தியா முழுவதும் சுற்றியலைந்து மக்களிடையே அவர் ஆற்றிய உரைகளையும் பதிவு செய்யவேண்டும். சில உரைகளின் குறிப்புகளை காந்தியடிகளே தயாரித்துவைத்திருப்பார். ஆனால், அவற்றின் விரிவாக்கம் இருக்காது. சில உரைகள் நேரிடையாக நிகழ்த்தப்பட்டிருக்கும். அதற்குக் குறிப்புகளே இருக்காது. அப்படிப்பட்ட தருணங்களில் அப்போது பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளைத் தேடித் தொகுக்கவேண்டும். சில இதழ்கள் சில செய்திகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் அளித்திருக்கும். சில இதழ்கள் மிகச்சுருக்கமான செய்திகளையே வெளியிட்டிருக்கும். சில உரைகளுக்கு ஒலிநாடாப்பதிவுகள் மட்டுமே கிடைக்கும். அனைத்தையும் ஒப்பிட்டுப் பார்த்து ஒருமை சிதையாதபடி அந்த உரையை முழுமையாக எழுதவேண்டும். இறுதியாக அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க வேண்டும். காந்தியடிகள் ஆங்கிலம், இந்தி, குஜராத்தி என பல மொழிகளில் கடிதங்களை எழுதியவர். அவர் யாருக்கு எழுதுகிறார் என்பதைப்பொறுத்து அதன் மொழியை அவர் தீர்மானித்திருப்பார். அவற்றை காலவரிசைப்படுத்தும்போது, அவையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படவேண்டும்.

உடனுக்குடன் மொழிபெயர்த்து வழங்க சுவாமிநாதனிடம் ஒரு குழுவே வேலை செய்தது. மூலமொழி தெரிந்தவரை அருகில் வைத்துக்கொண்டு, ஒவ்வொரு சொல்லாகப் படித்துப்படித்து ஒரு சிறிய பிழைகூட நேர்ந்துவிடாதபடி சரிபார்க்கவேண்டும். இப்படி கடுமையான உழைப்புக்குப் பிறகே, தொகைநூலின் ஒவ்வொரு பக்கமும் உருவானது. காந்தியடிகளின் எழுத்துகள் வழியாக அவரை முழுமையாக அறிந்துகொண்டார் சுவாமிநாதன். அவர் மீது கொண்ட மதிப்பு நாளுக்குநாள் பெருகியது.

சுவாமிநாதனின் இன்னொரு ஆர்வம் ரமணர். ரமணரும் காந்தியடிகளும் ஒரு பாதையின் இரு புறங்களிலும் நின்று அவரைச் செலுத்திய சக்திகள் என்றே சொல்லவேண்டும். சென்னையில் அவர் வசித்தவரைக்கும் ஒவ்வொரு வாரமும் ஞாயிறுதோறும் நண்பர்களை அழைத்து ரமணரைப்பற்றி உரையாடுவதை அவர் வழக்கமாகக் கொண்டிருந்தார். ‘ரமண பக்தர்கள் சபை’ என்றே அச்சந்திப்புக்கு பெயர் சூட்டியிருந்தார். காந்தி தொகைநூல்களை உருவாக்கும் முயற்சியில் இறங்கியபிறகும் அப்பழக்கம் அவரைவிட்டு மறையவில்லை.

நேதாஜி நகரிலிருந்த தன் அடுக்கக வீட்டுக்கு நண்பர்களை அழைத்து பேசுவது வழக்கமாகிவிட்டது. அந்நண்பர்களில் பெரும்பாலானோர் காந்தி தொகைநூல் வேலையில் அவருக்குத் துணையாகப் பணியாற்றியவர்கள். அதனால், ரமணருடன் காந்தியடிகளும் அந்நிகழ்ச்சியின் ஒரு பேசுபொருளாக மாறினார். பல நண்பர்கள் நன்கொடைகளின் உதவியோடு தில்லியிலேயே ஓர் இடத்தை வாங்கி ரமணர் மையத்தை உருவாக்கினார். ரமணரைப்பற்றி சுவாமிநாதன் எழுதிய நூலை நேஷனல் புக் டிரஸ்ட் வெளியிட்டது.

ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்று முப்பதாண்டுகளுக்கும் மேலாக ஆங்கில ஆசிரியராகப் பணியாற்றியவர் சுவாமிநாதன். மனத்தில் நினைப்பதைத் தெளிவாகவும் சரியாகவும் கச்சிதமாகவும் வெளிப்படுத்தும் ஆற்றல் கொண்டது அவருடைய ஆங்கிலம். ஆறாண்டுகால பத்திரிகைப்பணி ஆங்கிலத்தை மெருகோடும் ஈர்ப்போடும் பயன்படுத்தும் கலையில் அவருக்குத் தேர்ச்சியை அளித்திருந்தது. மேலும், இளமைப்பருவத்திலிருந்தே தனக்குள் உறைந்திருந்த சட்டமொழியறிவு வழியாக எதையும் குழப்பமில்லாத வகையில் நுட்பமாக வெளிப்படுத்தும் சொற்சிக்கனத்தையும் அவர்

பெற்றிருந்தார். ஐம்பதாயிரம் பக்க அளவுக்கு நீண்ட காந்தி தொகைநூல்களை உருவாக்கும் பணிக்குத் தேவையான மொழியாற்றல், நுட்பம், தெளிவு, கச்சிதம், அர்ப்பணிப்புணர்வு என அனைத்தும் தன் வாழ்க்கையனுபவங்கள் வழியாககைவரப்பெற்றவராக இருந்தார் சுவாமிநாதன். அவர் இப்படி கனிந்து வரும் தருணத்துகாகவே, “இன்னும் கொஞ்ச காலம் பொறுத்திரு. தக்க நேரத்தில் உன்னை அழைப்பேன்” என்று இளமைக்காலத்தில் காந்தியடிகள் சொன்ன சொல் காத்திருந்ததுபோலும்.

காந்தியடிகளின் ஆங்கில வாக்கியங்களைப் படித்துப்படித்து சுவாமிநாதனுக்கு அவர் கையாளும் மொழிநடையைப்பற்றிய ஒரு புரிதல் கிடைத்துவிட்டது. அதனால் குஜராத், இந்தி ஆகிய மொழிகளில் எழுதப்பட்ட படைப்புகளின் ஆங்கில மொழிபெயர்ப்பு தன் பார்வைக்கு வரும்போது, அவற்றைச் சிறுகச்சிறுக செறிவூட்டி காந்தியடிகள் பயன்படுத்தும் ஆங்கிலநடையிலேயே அமைப்பதில் சுவாமிநாதன் தேர்ந்தவராக இருந்தார்.சுவாமிநாதனின் இடையறாத உழைப்பில் உருவான முதல்நூலாக காந்தி தொகைநூல் வரிசையில் நான்காவது தொகுதி வெளிவந்தது.இது 1904 முதல் 1905 வரையிலான கால இடைவெளியில் காந்தியடிகள் எழுதிய மற்றும் பேசிய ஆக்கங்களின் தொகைநூல்.

சுவாமிநாதன் தலைமையிலான தொகுப்புக்குழு ஒரு சுயேச்சையான குழு. சுவாமிநாதன் மீது மொரார்ஜி தேசாய்க்கு முழு அளவில் நம்பிக்கை இருந்தது. ஆயினும், இடையிலிருந்த அதிகாரிகள் ஒவ்வொருவரும் தொகுப்புக்குழுவின் மீது தனக்கும் அதிகாரம் இருப்பதாகக் காட்டிக்கொள்வதற்காகவே அடிக்கடி தொல்லை கொடுத்தனர். திட்டவேலைகள் எப்படி நடக்கிறது என்பதை சுவாமிநாதன் தம் அலுவலகத்துக்கு வந்து அடிக்கடி சொல்லவேண்டும் என அவர்கள் எதிர்பார்த்தார்கள். சந்திக்கவில்லை என்றால் தம் மதிப்பு குறைந்துவிட்டதாக நினைத்து எரிச்சல் அடைந்தார்கள். அவரைப்பற்றி அமைச்சரிடம் புகார் அளித்தார்கள். அமைச்சர் அந்தப் புகாருக்கு உரிய முக்கியத்துவம் அளிக்கவில்லை என்பதை உணர்ந்து, ஒரு ஆலோசனைக்கூட்டத்தில் சுவாமிநாதன் குழு மிகவும் நிதானமாக வேலை செய்கிறது என்று குரலெழுப்பினர். அப்போது தொகுப்பு வேலையில் நிதானமாக நடக்கவேண்டிய அவசியத்தை முன்வைத்து அவர் நீண்ட விளக்கமளித்தார்.

“தொகுப்பு வேலை என்பது ஒரு எழுத்தாளரிடம் கையெழுத்துப் பிரதியை வாங்கி புத்தகமாக்குவதுபோன்றதல்ல. நாடெங்கிலிருந்தும் சேகரிக்கப்பட்ட தகவல்களை வகைமை சார்ந்து பிரிப்பதும் தொகுப்பதும் கடுமையான உழைப்பைக் கோருபவை. பிழையே இடம்பெறாதபடி ஒவ்வொரு கணமும் கவனமுடன் இருக்கவேண்டும். குஜராத் மொழியிலிருந்தும் இந்தி மொழியிலிருந்தும் கிடைத்தவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும்போதும் அதை பல நிலைகளில் ஒப்பிட்டுச் சரிபார்த்து செம்மைப்படுத்தும்போதும் மிகவும் கவனமுடன் இருக்கவேண்டும். வேகமாகச் செய்யவேண்டும் என்பதற்காக எடுத்தோம் கவிழ்த்தோம் என்று செய்துவிடமுடியாது. எதிர்காலத்தில் ஒரே ஒரு பிழையைக்கூட சுட்டிக்காட்ட இடமளித்துவிடக்கூடாது. வேகத்தைக்காரணம்காட்டி,எதிர்காலத்தில் காந்தியத்தில் ஆய்வு செய்ய முனைகிறவர்களுக்கும் வாசகர்களுக்கும் துல்லியமான தகவல்களை மட்டுமே கொடுக்கவேண்டும் என்பதில் சமரசம் செய்துகொள்ளமுடியாது.”

சுவாமிநாதனின் சொற்கள் அதிகாரிகளின் தலையீட்டை ஓரளவு தடுத்தன என்றே சொல்லவேண்டும். அதற்குப் பிறகு அதிகாரிகள் அவர் வழிக்கு வருவதில்லை. சுவாமிநாதனும் தன் குழுவினருடன் தொகுப்பு வேலையில் தடையின்றி மூழ்கிக் கிடந்தார். ஆண்டுக்கு மூன்று தொகுதிகள் என்கிற கணக்கில் அடுத்தடுத்து தொகைநூல்கள் வெளிவந்தபடியே இருந்தன. ஒவ்வொரு தொகுதியும் அவருடைய உழைப்புக்கும் அர்ப்பணிப்புணர்வுக்கும் சான்றாக விளங்கி அவருக்குப் பெருமை தேடித் தந்தது. 1969 ஆம் ஆண்டில் மொரார்ஜி தேசாய் அமைச்சர் பதவியிலிருந்து வெளியேறினாலும் காந்தி தொகைநூலாக்க ஆலோசனைக்குழுவின் தலைவராக பணியைத் தொடர்ந்தார். அதனால் சுவாமிநாதனுடைய பணியில் எவ்விதமான இடையூறும் ஏற்படவில்லை. சுவாமிநாதன், தன்னலமற்ற சேவையைப் பாராட்டி 1972 ஆம் ஆண்டில் அரசு பத்மபூஷன் விருதளித்து கௌரவமளித்தது.

இந்திராகாந்தி தலைமையிலான அரசு 26.06.1975 அன்று நாடெங்கும் நெருக்கடி நிலையை அறிவித்தது. எதிர்க்கட்சியைச் சேர்ந்த பல தலைவர்கள் நாடுமுழுதும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்கள். காந்தியடிகளின் தொகைநூல்கள் அச்சடிக்கப்பட்டு வந்த நவஜீவன் அச்சகம், அரசுக்கு ஏற்பில்லாத ஒரு தனியார் பிரசுரத்தை அச்சடித்துக்கொடுத்த காரணத்துக்காக மூடப்பட்டது. இதனால் தொகைநூல் வேலை முடங்கியது. அப்போது வேறு வழியின்றி, தகவல் ஒளிபரப்பு அமைச்சகத்தின் ஆலோசகர் ஒருவரின் துணையோடு இந்திரா காந்தியைச் சந்தித்து முறையிட்டார் சுவாமிநாதன். அதைத் தொடர்ந்து அச்சகம் மீண்டும் திறக்கப்பட்டது.

ஏற்கனவே சுவாமிநாதன் மீது மனவருத்தத்தில் இருந்த அதிகாரிகள், தமக்கு சாதகமாக இருந்த சூழலைப் பயன்படுத்திக்கொண்டு அவர்மீது மீண்டும் புகார் எழுப்பத் தொடங்கினார்கள். மொரார்ஜி தேசாய்க்கும் சுவாமிநாதனுக்கும் இடையிலான தொடர்பு, அவர் கைது செய்யப்பட்ட பிறகும் தொடர்வதாகவும்; தொகைநூலாக்கத் தலைவராக இருந்துகொண்டே ஊதியமீட்டும் வகையில் தனியார் பிரசுரத்துக்காக புத்தகம் எழுதிக் கொடுப்பதாகவும் (நேஷனல் புக் டிரஸ்ட் நிறுவனத்துக்காக சுவாமிநாதன் தனக்கு மிகவும் பிடித்த ரமணரைப்பற்றி ஒரு புத்தகம் எழுதியிருந்தார்); ‘இந்தியன் எக்ஸ்பிரஸ்’ இதழை விட்டு விலகிவந்த பிறகும் அதன் குழுத்தலைவரான ராம்நாத் கோயங்காவுடன் மறைமுகமாக தொடர்பு வைத்திருப்பதாகவும் மேலிடத்துக்கு குறிப்புகளை அனுப்பினார்கள்.

காந்தியடிகள் தொகைநூலாக்கக்குழுவையே கலைத்துவிடலாம் அல்லது மூப்பின் அடிப்படையில் சுவாமிநாதனை தலைமைப்பொறுப்பிலிருந்து விலக்கிவிடலாம் என ஆலோசனையும் வழங்கினார்கள். அன்று அமைச்சராக இருந்த வி.சி.சுக்லாவுக்கு



இரண்டையும் செய்துவிடலாம் என்ற எண்ணமிருந்தது. அவருடைய வழிகாட்டலின்படி உடனடியாக ஆலோசனைக்குழுவைக் கலைத்துவிடும் அரசு ஆணை பிறப்பிக்கப்பட்டது. நல்வாய்ப்பாக, ஏற்கனவே மூடப்பட்டிருந்த நவஜீவன் அச்சகத்தைத் திறப்பதற்காக இந்திராகாந்தியைச் சந்தித்துப் பேசிய சாரதா பிரசாத், இப்போது மீண்டும் இந்திரா காந்தியைச் சந்தித்து உண்மைச்செய்திகளை எடுத்துரைத்தார். அவற்றையெல்லாம் அவர் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டாரே தவிர எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை ரத்துசெய்ய நினைக்கவில்லை.

இதற்கிடையில் இருபத்தியொரு மாதங்கள் நீண்ட நெருக்கடிநிலை விலக்கிக்கொள்ளப்பட்டு தேர்தல் அறிவிக்கப்பட்டது. தேர்தலில் இந்திராகாந்தி தலைமையிலான காங்கிரஸ்தோல்வியுற்று பதவி விலக,மொரார்ஜி தேசாய் பிரதமராக பதவியேற்றார். ஒளிபரப்புத்துறை அமைச்சராக பதவியேற்ற எல்.கே.அத்வானி பழைய ஆணைகள் அனைத்தையும் ரத்துசெய்து தொகைநூலாக்கக்குழு மீண்டும் தன் பணியைத்தொடர அனுமதித்தார். ஆனால், அதிகாரிகளின் சந்தர்ப்பவாத அரசியல் ஆட்டங்களால் சலிப்படைந்த சுவாமிநாதன் பொறுப்பிலிருந்து விலகிவிட முடிவெடுத்தார். ஒருநாள் மொரார்ஜி தேசாயைச் சந்திக்கக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு அவரிடம் தன் முடிவை எடுத்துரைத்தார்.

“உங்களிடம் ஒப்படைத்த பொறுப்பை ஏன் தட்டிக்கழிக்க விரும்புகிறீர்கள்? நீங்கள்தான் இதைச் செய்ய பொருத்தமான ஆள் என நான் நினைத்தேனே” என்று வேகமாகக் கேட்டார் தேசாய். ஏதாவது பொருத்தமான ஒரு பதிலைச் சொல்லவேண்டும் என்பதற்காக சுவாமிநாதன் தன் முதுமையைக் காரணமாகச் சொன்னார். உடனே தேசாய், “உங்களைவிட ஒரு வயது பெரியவன் நான். இந்த வயதில் நான் பணியாற்றும்போது நீங்கள் முடியாது என்று சொல்லலாமா?” என்று உரிமையுடன் கேட்டார். வேறு வழியின்றி சுவாமிநாதன் திரும்பிவந்து பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

சுவாமிநாதனின் தலைமையில் தொண்ணூற்றியெட்டாவது தொகைநூல் *1984*ஆம் ஆண்டில் வெளிவந்தது. காந்தியடிகள் சுடப்படுவதற்கு முதல்நாள் வரையில் அவர் எழுதிய, உரையாடிய ஆக்கங்கள் அனைத்தும் முறையாக ஆவணப்படுத்தப்பட்டன. அந்தத் தொகுதியை வெளியிட்ட அன்றைய தலைமையமைச்சர் இந்திராகாந்தி, சுவாமிநாதனைப் புகழ்ந்து, அர்ப்பணிப்புணர்வு மிக்க அவர் உழைப்புக்கு தேசத்தின் சார்பாக நன்றி தெரிவிப்பதாக அறிவித்தார். அப்போது தொகைநூல் வேலை முடிந்தாலும் அட்டவணைவேலை மட்டுமே எஞ்சியிருந்தது. இருபத்துநான்கு ஆண்டு கால நீண்ட உழைப்புக்குப் பிறகு *1985*ஆம் ஆண்டில் அவர் சென்னைக்குத் திரும்பினார். *1987*இல் அவருக்கு காந்தி கிராம பல்கலைக்கழகம் முனைவர் பட்டமளித்து கௌரவித்தது.

சென்னைக்குத் திரும்பினாலும் செம்மைப்படுத்தும் வேலையில் தொகைநூல் குழுவினருக்கு தொடர்ந்து உதவிகள் செய்தபடியே இருந்தார் சுவாமிநாதன். தனக்கு வரும் மெய்ப்புகளை உடனுக்குடன் பார்த்துத் திருத்தி அனுப்ப அவர் தவறியதே இல்லை. தொகைநூல் குழுவுக்கு எழுதிய ஒரு கடிதத்தில் இத்தனை ஆண்டுகள் காந்தியோடு இணைந்திருந்த அனுபவத்துக்காக கடவுளுக்கு நன்றி தெரிவித்தார். அக்கடிதத்தில் காந்தியடிகளை ஹனுமான் என்றும் அவர் காலமெல்லாம் தன் தோள்மீது ஏறி அமர்ந்துகொண்டு ஒவ்வொருகணமும் தட்டிக்கொடுத்து பணியாற்றும்படி தூண்டிக்கொண்டே இருந்தாரென்றும் வேடிக்கையாகக் குறிப்பிட்டிருந்தார்.

**கா**ந்தியின் ஆக்கங்களை நூறு தொகுதிகளாக வகைப்படுத்தித் தொகுத்தவர் சுவாமிநாதன். ஏறத்தாழ *50,000* பக்கங்கள். ஆனால், ஒரு தொகுப்பாசிரியராக எந்தத் தொகுதியிலும் அவர் தன் பெயரைக் குறிப்பிட்டதே இல்லை. தன் பெயரை ஒருபோதும் முன்வைத்துக்கொள்ள விரும்பாத தொண்டர் அவர். செயலே முக்கியம், செய்பவனல்ல என்பது அவர் கொள்கை. அவர் மறைவுக்குப் பிறகு வெளிவந்த நூறாவது தொகுதியில் மட்டும் இறுதிப்பகுதியில் தொகுப்புக்குழுவில் பணியாற்றியவர்களின் பட்டியலில் பத்தோடு பதினொன்றாக அவர் பெயர் சேர்க்கப்பட்டிருந்தது. நூறாவது தொகுதி வெளியீட்டு விழாவில் கலந்துகொண்ட தலைமையமைச்சர் நரசிம்மராவோ, அமைச்சர்களோ, அதிகாரிகளோ யாருமே தம் பேச்சில் சுவாமிநாதனின் பெயரைக் குறிப்பிடவே இல்லை. ஆனால், மக்கள் நெஞ்சில் பதிந்துவிட்ட காந்தியத்தொண்டர்கள் வரிசையில் சுவாமிநாதனின் பெயர் எப்போதும் இருக்கும். ●

**பாவண்ணன் <paavannan@hotmail.com>**



# எம்.ரிஷான் ஷெரீப் கவிதைகள்

## 1. அந்தகாரத்தினூடான ஆதிக் கிரணம்

இரவு நகரத்தின் விளக்குகள்
பிரசவிக்கும் நிழல்களை
தத்துக் குழந்தைகளென வளர்க்கிறது இருள்

செந்நிற விளக்குகள் எரிந்துகொண்டிருந்த
அவ் வலிய கட்டடத்தின் புறத்தே
தனியே நின்று கொண்டிருக்கும் இளம்பெண்
ஒரு ஒற்றை வண்ணத்துப் பூச்சி

உப்புக் கரிக்கும் பார்வையோடலைந்த
மேற்பார்வையாளனின்
கன்னத்தில் விரல்கள் பதித்து
பணி தொலைத்து வந்திருப்பவள்

இன்னும் மீதமிருக்கின்றன
அலையடிக்கும் பெருங்கடல்
அவளது சிரசினுள்ளும்
பனி படர்ந்த பெருமலைகள் அவளது
பாதங்களின் கீழும்

கட்டடத்தின் இரும்புத் தூண்களை விடவும்
பலம் வாய்ந்த தைரியம்
அவளது சுவாசம்
அச் செந்நிற ஒளிகளை ஊடறுத்து
பெருநம்பிக்கையாய்த் தெரிகிறது
தூரத்தேயொரு கலங்கரை வெளிச்சம்

## செம்மறிகளின் குதிரைக்காரி

புராதனச் சிதைவுகளின் கற்கள்
கருப்பு வெள்ளை நிறங்கள் வழியே
காலத்தைப் பேசுகின்றன
புயல்வேளைகளில் மலைச் சரிவுகளில் புரளுமவை
எவ்வாறாயினும் நிகழ்காலத்துக்குள்
குதித்து விடுகின்றன

மலைச் சரிவில்
குதிரையின் மீது வீற்றிருப்பவளின் பார்வை
செம்மறிகளின் பசிய நிலத்தை மேய்ந்தவாறிருக்கிறது

அந்திச் சூரியனின் இதமான மஞ்சள்
செம்மறி ரோமங்களில் பளபளக்கும் நேரம்தான்
மேய்ச்சலின் எல்லை

மலையடிவாரத்தில் செழித்த கோரைப் புற்களிடையே
சிட்டுக்குருவியின் மென் நடையென
சலனமின்றி
பதுங்கியிருக்கிறது ஓநாய்க் கூட்டம்
ஏதேனும் வலிய விலங்கின்
வேட்டையில் எஞ்சும் இரை
அவற்றின் தீர்க்கமான கண்களில் ததும்புகின்றன

எப்போதும்
செம்மஞ்சளும் இளஞ்சிவப்பும் ஆகாயத்தில் பரவும்
கணத்தில்
குதிரைக் கனைப்பும்



குதிரைக்காரியின் சாட்டையொலியும்
செம்மறிகளைப் பட்டிக்குத் துரத்தும்
பசித்த ஓநாய்களைக் காட்டுக்குள்ளும்

அன்று
சாட்டைப் பேரோசைக்கு கட்டுப்படாது
ஓடி மறையாதிருக்கும் ஓநாய்களைக் கண்டு
குதிரையிலிருந்திறங்கும் இடைச்சி
கைகளுக்குத் தட்டுப்பட்ட
புராதனக் கற்களையெடுத்து
கொடுமிருகங்களின் திசையிலெறிகிறாள்

அம் மாலை வேளையில்
தொன்ம காலமொன்று மீண்டும்
வனவிலங்குகளை
வேட்டையாடத் தொடங்கிற்று

## நீர்க்கோழிகள் தப்பித்திடா வலை

குளக்கரையின் பச்சைக் கோரைகளிடையே
நீர்க் கோழிகளின் அசைவைக் கண்ட சிறுமி
குதூகலித்தாள்

எவராலும் அவற்றின் குஞ்சுகளைத் திருட முடியாதெனவும்
இடத்துக்கிடம் அவை குஞ்சுகளை விழுங்கி
காவிப் பறக்குமெனவும் கூறிய
சிறுவனின் வார்த்தைகளை
நம்பியவளின் ஏக்கம்
ஒரு வலையெனப் பச்சைக் கோரைகளைப் போர்த்திற்று

இனியெங்கும் அவை பறந்திடா
சிறுமியின் வலையை விட்டு ●

**எம்.ரிஷான்ஷெரீப்**<mrishansha@gmail.com>

# ஐயாவின் கணக்குப் புத்தகம்



அ.முத்துலிங்கம்

ஐயா ஒருநாள் என்னை ஒட்டு மாங்கன்று வாங்க அழைத்துப் போனார்.என்னுடைய வாழ்நாளில் ஐயா அழைத்து அவருடன் நான் மட்டும் போனது அதுவே முதல் தடவை; கடைசியும்.

வீட்டில் ஏழு பேர் ஐயாவுடன் போகக்கூடிய தகுதி பெற்றிருந்தும் ஐயா என்னையே தேர்வு செய்திருந்தார். அது அளவில்லாத பெருமையாக இருந்தது. அவர் மனம் மாறுவதற்கிடையில் உடை மாற்றி புறப்பட்டேன். ஒட்டுமாங்கன்று வாங்க முடியாது, நாங்கள்தான் உண்டாக்கவேண்டும். சாதரண மாங்கன்று ஒன்றை வாங்கி நல்ல பழம்தரும் மரக் கிளையுடன் ஒட்ட வைத்து தினம்தண்ணீர் ஊற்றவேண்டும். அந்த வேலைதான் எனக்கு தரப்பட்டது. என் சகோதரர்களின் பொறாமையை தக்க வைப்பதற்காக நான் என் ஏமாற்றத்தை வெளியே காட்டவில்லை.

தினமும் அதிகாலை சிறாப்பர் வீட்டுக்குப் போய் நான் மரத்துக்கு தண்ணீர் ஊற்றுவேன். சிறாப்பர் என்பது அவருடைய பெயர் அல்ல. அப்பொழுதெல்லாம் வங்கிகளில் காசாளர்களை சிறாப்பர் (Shroff) என்றே அழைத்தார்கள். இவர் தன் வீட்டிலும் ஒரு வங்கி நடத்தினார். ஐயா இவரிடம் காசு கடன் வாங்குவார். அவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து வட்டி வாங்கிப் போவார். அவருடைய கன்னச் சதைகள் தண்ணீர் நிரப்பியதுபோல ஊதிக்கிடக்கும். சிரித்தால் கண் இமைகள் தானாகவே மூடிவிடும். ஒரு தாரா நடப்பதுபோல போல கால்களை அகட்டி வைத்து நடப்பது வேடிக்கையாக இருக்கும். நானும் சிறுவயதில் அப்படித்தான் நடப்பேனாம். எனக்கும் ஒருகாலத்தில் வீட்டிலே பட்டப் பெயர் சிறாப்பர். பின்னர் அது வழக்கழிந்துவிட்டது.

ஐயாவிடம் முதிரைமரத்தில் செய்த பெட்டகம் ஒன்று இருந்தது. உள்மரம் சந்தனம் என்பதால் அதை திறந்ததும் நல்ல மணம் வீசும்.பெட்டியை எட்ட நின்று பார்ப்போம்; கிட்டப்போய் தொடமுடியாது. அதற்குள் நான் விரும்பிய இரண்டு பொருட்கள் இருந்தன. ஒன்று எங்கள் சாதகக் கட்டுகள். சாத்திரியார் வரும்போது அவை வெளியே எடுக்கப்படும். இரவிரவாக வீட்டிலே சாதகம் பார்ப்பார்கள். இரண்டாவது, ஒரு தடித்த அட்டை போட்ட தொக்கையான கணக்குப் புத்தகம். குத்து விளக்கை கொளுத்திவைத்து அந்த வெளிச்சத்தில் ஐயா,வயலட் பென்சிலை நாக்கில் தொட்டு தொட்டு கணக்கு எழுத்துவார். பின்னர் கணக்குப் புத்தகம் மரப்பெட்டிக்குள் வைத்து பாதுகாக்கப்படும்.

ஐயாவுக்கு நிரந்தர வருமானம் கிடையாது. அவராக ஒரு வேலைக்குச் சென்றதில்லை. புகையிலை வியாபாரம்தான். சிப்பம் சிப்பமாக கட்டி ரயிலில் கொழும்புக்கும் கண்டிக்கும், மாத்தளைக்கும் கேகாலைக்கும் அனுப்புவார். பின்னர் மூன்று மாதத்துக்கு ஒரு முறை புறப்பட்டு இந்த ஊர்களுக்கெல்லாம் சென்று பணத்தை அறவிட்டு வருவார். அநேகமாக பாதி பணம்தான் கிடைக்கும். அம்மா ஏதும் தேவைக்கு காசு கேட்டால் மீதி கடன் அறவிட்ட பின்னர் தருவதாகச் சொல்வார். அப்படி ஏதும் வந்ததாகத் தெரியவில்லை. தினம் பெட்டகத்தை திறந்து கணக்குகள் எழுதிவிட்டு மறுபடியும் பூட்டிவைப்பார்.

ஐயாவுக்கு புத்தகங்கள் எதிரி. வீட்டில் இருந்த ஒரே புத்தகம் பஞ்சாங்கம்தான். அதிகமாக உபயோகம் கண்டதும் அந்தப் புத்தகம்தான். வீட்டிலே பல்லி யாராவது உடம்பிலே விழுந்துகொண்டேயிருக்கும். ஐயா உடனே பஞ்சாங்கத்தை புரட்டி பலன் பார்ப்பார். நாலு நாள் கழித்து அது எப்படி பலித்தது என்று நாலு பேருக்குச் சொல்வார். பஞ்சாங்கத்தை தவிர வீட்டிலே பாடப்புத்தகங்களும் இருந்தன. மூத்த அண்ணர் ஒருவர்தான் புதிதாக புதிய மணத்துடன் புத்தகத்தை அனுபவிப்பார். அதன் பின்னர் அது வரிசையாக ஒவ்வொரு வருடமும் கைமாறி கீழே வரும். என் முறை அணுகும்போது, முன் அட்டை பின் அட்டை எல்லாம் கிழிந்துபோய் பரிதாபமான நிலையில் தொட்டால் ஒட்டிப் பிடிக்கும் தன்மையுடன் இருக்கும். எனக்குப் பின்னர் இன்னும் இரண்டு பேருக்கு அது போகவேண்டும்.

*நாவல்களையும் வாரப்பத்திரிகைகளையும் இரவல் வாங்கி ஐயாவுக்குத் தெரியாமல் படிப்பேன். அம்மா என் பக்கம் என்றபடியால் விசயம் ஒருமாதிரி போய்க்கொண்டிருந்தது. ஒரே எதிரி தம்பிதான். ஐயாபோல அவனும் புத்தகங்களுக்கு எதிரி. என்னை எப்பொழுதாவது நாவலுடன் பார்த்தால் ஐயாவுக்கு மூட்டிவிடுவான். அப்படியிருந்தும் பாடப் புத்தகத்துக்குள் ஒளித்து வைத்து திகம்பரசாமியார் முழு நாவலையும் படித்துவிட்டேன்.*

*பஞ்சாங்கத்தில்பலன் பார்ப்பதோடு மட்டும் ஐயாவுக்கு பல்லியுடனான சம்பந்தம் முடிவுக்கு வரவில்லை. ஐயாவின் வாழ்வில் பல்லி பெரும் பங்கு வகித்திருக்கிறது. அவருக்கு இரண்டுதாரம். நாங்கள் ஏழு பேர் இரண்டாம் தாரத்துக்கு பிறந்தவர்கள். முதல் தாரத்துக்கு இரண்டு பிள்ளைகள். முதல் தார மனைவி இறந்தவுடன் பிள்ளைகளைப் பார்க்க ஐயாவுக்கு ஆள்தேவை. நல்லூரில் இருந்து ஒரு பெண்ணின் சாதகத்தை தரகர் அவசரமாகக்கொண்டு வந்தார். சொந்தக்காரர்கள் நெருக்கினார்கள். ஐயாவால் முடிவெடுக்க முடியவில்லை. கோயில் சுவரில் ஏறிக்குந்திவிட்டார். ஏதாவது ஒரு சைகை கிடைத்தால்தான் இறங்குவதாக சங்கல்பம். காலையில் ஏறியவர் மதியம் ஆகியும் இறங்கவில்லை. பின்னேரமும் மறைந்துவானத்திலிருந்து இருட்டு மட்டும் இறங்கியது. ஐயாவுக்கு பசியில்கண் மங்கியது. அப்போது ஒரு பல்லி சத்தம் போட்டது. அதுக்கும் பசி. ஐயா எதிர்பார்த்த சம்மதம் கிடைத்து பொத்தென்று குதித்தார். திருமணம் முடிந்து நாங்களும் பிறந்தோம்.*

*அம்மா எப்படி 15 வயதில் இரண்டாம் தாரமாக இரண்டு பிள்ளைகளுடைய ஒருவருக்கு வாழ்க்கைப்பட்டார் என்பது இன்றைக்கும் புதிர்தான். அந்தக் காலத்தில் அவர்வேறு என்ன செய்திருக்க முடியும்? பெரியவர்கள் சொன்னதைக் கேட்கவேண்டியதுதானே.மணமுடித்து வரும்போது அவருக்கு நீண்ட கூந்தல் இருந்தது என்று சொல்வார்கள். தூங்கும்போது ஒரு தலையணையில் அவர் தலையும் இன்னொரு தலையணையில் அவர் கூந்தலும் கிடக்குமாம். ஒருநாள் நான் அம்மாவிடம் நேரில் கேட்டுவிட்டேன்.அம்மா ஏன் நீங்கள் சிரிப்பதில்லை. அவர் சிரித்தார்; அது முழுச் சிரிப்பு இல்லை. இரண்டாம் பரிசு பெற்ற ஒருவரின் சிரிப்பு.*

*ஐயாவுக்கும் எங்களுக்குமிடையேநிறையத் தூரம் இருந்தது. அவர் என்னைத் தூக்கியது நினைவில் இல்லை. தலையை தடவியது கிடையாது. நான் பெரிய குளப்படிக்காரன் என்று அவர் நினைத்திருக்கக்கூடும். சின்ன வயதில் வீட்டில் உள்ள பொருள்களை உடைத்துவிடுவேன். ஒருமுறை அம்மாவுடைய வெண்கலக் குடத்தை போட்டு நெளித்துவிட்டேன். இன்னொரு தடவை ஐயா அருமையாகப் பாதுகாத்த சுவிஸ் மணிக்கூட்டை உடைத்தேன்.*

*ஆனால், ஐயாவால் மன்னிக்க முடியாத ஒரு குற்றத்தை நான் செய்தேன். எங்களிடம் மிகப் பழமையான கருங்காலி மரத்தில் செய்த கட்டில் ஒன்று இருந்தது. நாலு பக்கமும் நுளம்பு வலை போடுவதற்கு வசதியாக மரத்தூண்கள் இருக்கும். ஒருநாள் இந்த மரத்தூணை எவ்வளவு தூரத்துக்கு வளைக்கலாம் என்று பரீட்சித்துப் பார்த்தபோது அது படாரென்று பெரிய சத்தத்துடன் முறிந்தது. ஐயாவின் கண்களில் முதலில் கோபமும் பின்னர் சோகமும் தெரிந்தது. அது பரம்பரையாக வந்த கட்டில். அவருடைய மனதில் அது எத்தனை பெரிய துயரத்தை உண்டாக்கியிருக்கும். நான் ஓடுவதற்கு தயாராகவே இருந்தேன். ஆனால், அவர் என்னை தண்டிக்கவே இல்லை. அதன் பின்னர் ஐயா வெளியே புறப்படும்போது வீட்டில் அத்தனை பேர் இருந்தாலும் என்னை மட்டும் தனியே அழைத்து இப்படி சொல்வார். 'சுவர், தூண்கள், கூரை பத்திரம். நான் திரும்பும்வரை பார்த்துக்கொள். உடைத்துவிடாதே.'*

*ஒரு தடவை எனக்கு ஒரு ரூபா கிடைத்தது. வீட்டுக்கு வந்த பெரியவர் ஒருவர் எனக்கு கொடுத்தது. அந்தக் காலத்தில் அது மிகப் பெரிய காசு.நான் அதுவரை சில்லறைக் காசுகளைத்தான்பார்த்திருக்கிறேன். எனக்கு தாளாக ஒரு ரூபா கிடைத்திருந்தது.மூளையில் கனவு தொடங்கிவிட்டது. ஆங்கிலப் புத்தகத்தின் கடைசி பக்கத்தில் பத்திரமாக ஒளித்து வைத்து ஒவ்வொருநாளும் தொட்டுப் பார்ப்பேன்.இந்தச் செய்தி ஐயாவின் காதுகளுக்கு எப்படியோ போய்ச் சேர்ந்துவிட்டது. ஏதோ அவசரத்துக்கு அவர் என்னிடம் ஒரு ரூபா கடன் கேட்டார். ஒரு பக்கம் பெருமையாக இருந்தது. திரும்பக் கிடைக்குமா என்ற அச்சமும் என்னை திக்குமுக்காட வைத்தது. என் முழுச் செல்வத்தையும் கேட்கிறார். எப்படி மறுக்கமுடியும்? அந்த புதுத்தாளை ஒருமுறை ஆசைதீர தடவிப்பார்த்துவிட்டு கொடுத்தேன். கொடுத்த கணமே பெரும் சோகம் என்னைக் கவ்வியது. ஒரு வாரம் கழித்து ஐயாவிடம் கடனைக்கேட்டேன். அடுத்த வாரம் என்றார். பொறுத்திருந்து அடுத்த வாரமும் கேட்டேன். 'இப்ப அவசர வேலையாக இருக்கிறேன். பிறகு கேள்' என்றார். இப்படி தினம் நான் கேட்பதும் ஒவ்வொருவிதமான பதில் வருவதும்வழக்கமாகிவிட்டது. ஒரு கடிதம் எழுதிப் பார்த்தேன், அதற்கும் பதில் இல்லை. ஆறு மாதம் ஓடிவிட்டது. அவர் ஒருநாள் மரக்கட்டிலில் ஓய்வாக உட்கார்ந்திருந்தபோது மடக்கினேன். 'என்னுடைய காசு' என்றேன். 'என்ன காசு?' என்றார். எனக்குதலை சுழன்றது. வீடு சுழன்றது. என்ன விளையாடுகிறாரா? அவருக்கு மறந்துவிட்டது.என் முகத்தை திருப்பி ஐயாவுடன் நான் பலநாள் பேசவில்லை. நான் கோபத்தில் அவருடன் பேசவில்லை என்பது ஐயாவுக்கே தெரியாது.*

*கொழும்பு, கண்டி போன்ற வெளியூர்களுக்கு ஐயா போகும்போது வீடு பெரும் தடல்புடலாக இருக்கும். அம்மா சுழன்று சுழன்று வேலை செய்வார். ஐயாவுக்கு வேண்டிய பலகாரங்களைச் சுட்டு பெட்டிகளில் அடைப்பார். சூட்கேசை இரண்டுநாள் முன்னரே அடுக்கினாலும் ஐயா மறுபடியும் அடுக்குவார். ஐயா திரும்பும்வரைக்கும் அம்மா பதற்றமாகவே இருப்பார். ஒருமுறை ஐயா போய் பல நாட்களாக கடிதம் இல்லை. திடீரென்று ஒருநாள் தந்தி வந்தது. அம்மா குழறி அழத்தொடங்கினார். தந்தியின் வாசகம் இதுதான். 'நான் அநுராதபுரம் ரயில் ஸ்டேசனில் சேமமாக இருக்கிறேன்.' அம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. கொழும்பிலிருந்து புறப்பட்ட ரயில் பாதி வழியில் கவிழ்ந்து பலர் உயிரிழந்து விட்டனர். இந்தச் செய்தி எங்களுக்கு தெரியாது.ஐயா சிறு காயத்துடன் தப்பி காட்டு வழியில் நடந்து அநுராதபுரம் ஸ்டேசனில் நின்று தந்தி கொடுத்திருக்கிறார். ஐயா வீட்டுக்கு வந்த பின்னரும் அம்மாவின் அழுகை ஒருவாரமாக ஓயவில்லை.*

அபூர்வமாக ஐயா சந்தோசமாக இருந்திருக்கிறார். பெரிதாக குடிக்கும் பழக்கம் இல்லை. கள்ளுக்கொட்டில் போனதே கிடையாது. வீதியிலே ஆடி ஆடி நடந்தது கிடையாது. எப்பொழுதாவது அவருடைய வெளியூர் வியாபார சிநேகிதர்கள் வந்தால் டவுனுக்கு போய் பிராண்டி வாங்கிவந்து நண்பரும் அவருமாக மரக்கட்டிலில் உட்கார்ந்து குடிப்பார்கள். மகிழ்ச்சி அப்படியே துள்ளும். தொடையிலே தாளம்போட்டு பாட்டுப் பாடுவார். எங்களை கைகாட்டி அருகில்வரும்படி கூப்பிடுவார். நாங்கள் போகமாட்டோம். இவர் வேறு யாரோ என்று எங்களுக்குத் தோன்றும்.

ஒருவர் வாழ்ந்த மிக நீண்ட வாழ்க்கையில் இப்படி ஒன்றிரண்டு சம்பவங்கள் மட்டுமே நினைவில் வருகின்றன. சிதறியிருக்கும் புள்ளிகளைதொடுத்து ஒட்டகம் உண்டாக்குவதுபோல இந்தச் சம்பவங்களின் கூட்டுத் தொகைதான் என் ஐயாவின் வாழ்க்கை. எங்கள் வீட்டில் நிறைய பலாமரங்கள் இருந்தன. அவற்றைக்கயிறு கட்டி இறக்கி ஊர்க்காரருடன் பங்குபோடுவோம். என்னுடைய இரண்டாவது அண்ணர் கொடுக்கு கட்டிக்கொண்டு மரம் ஏறினார். ஒரு பக்கம் கத்தியையும், மறுபக்கம் கயிற்றின் நுனியையும் செருகியிருந்தார்.இதுவே அவருக்கு முதல் தடவை. உச்சக் கொம்பில் பெரிய பழம் தொங்கியது. கயிற்றினால் காம்பைக் கட்டினார். ஒரு கிளையின் மேலால் கயிற்றைகீழே விட்டார். ஐயா கயிற்றை இழுத்துப் பிடிக்க அண்ணர் காம்பை வெட்டினார். பலாப்பழம் பெரும் சத்தத்துடன் கீழே விழுந்து சிதறியது. கயிற்றுக் கட்டுக்கு மேலே வெட்டாமல் அண்ணர் கீழே வெட்டிவிட்டார். அண்ணரின் கால்கள் நடுங்கின. அவருக்கு கீழே நூறு அடி காற்று. அப்பொழுது ஐயா சொன்னது மறக்க முடியாதது. ‘சரி, மகனே. கத்தியையும் கயிறையும் ஞாபகமாக மேலே எடுத்துப்போனாய். மூளையை மட்டும் கீழே விட்டுவிட்டாய். சரி, களைத்துப் போயிருப்பாய். மெதுவாக இறங்கு.’ அருமையான பழம் சிதறிப் போனதில் ஐயாவுக்கு பெரும் கோபம்.

ஒருமுறை என்னிலும் அந்தக் கோபம் திரும்பியது. எனக்கு சைக்கிள் ஓட்டுவதற்கு ஆசை. ஆனால், வீட்டில் இருந்த ஐயாவின் சைக்கிளை பார்க்கலாமே ஒழியதொடமுடியாது. ஐயாவை பார்க்க ஒருத்தர் தொலை தூரத்திலிருந்து அடிக்கடி வருவார். அவர் தன் சைக்கிளை யானை கட்டுவதுபோல பெரிய சங்கிலியால் கட்டி ஒரு மரத்துடன் இணைத்துவிடுவார். ஒருநாள் அவர் வந்தபோது ஐயா இல்லை. வழக்கம்போல சைக்கிளை கட்டாமல் சாய்த்துவிட்டு திண்ணையில் உட்கார்ந்தார். அந்தத் தருணம் கடவுளால் அருளப்பட்டது. அதை தவறவிட்டால் வாழ்நாள் முழுவதும் துக்கிப்பேன். நான் சைக்கிளை மெதுவாக உருட்டி வெளியே கொண்டுவந்து ஏறி ஓட்டினேன். எங்கள் கிராமத்தில் எங்கே சுற்றினாலும் 3, 4 தெருக்கள்தான். நான் பல சாகசங்கள் செய்தபடி தெருக்களில் ஓட்டினேன். இருந்தும், எழும்பியும், குனிந்தும், குனியாமலும், கையை விட்டும், விடாமலும், நின்றும், நில்லாமலும், மிதித்தபடியும், மிதிக்காமலும் வேகமாக ஓட்டினேன். தூரத்தில் ஐயா வருவது புழுதியில் தெரிந்தது. சைக்கிளை திருப்பினேன்; அது திரும்பவில்லை. பிரேக் பிடித்தேன், அது பிடிக்கவில்லை. என் சைக்கிள் ஐயாவின் சைக்கிளோடு மோதி, ஐயா மல்லாக்காக விழுந்தார். நான் குருவிபோல சட்டென்று எழும்பி மறைந்துவிட்டேன்.

அன்று நான் வீட்டுக்கு திரும்பவில்லை. மாலையாகும் வரைக்கும் வீதிகளில் சுற்றினேன். பசி தாங்க முடியாமல் மெதுவாக வீட்டுக்குள் எட்டிப் பார்த்தேன். ஐயா காத்துக்கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் கால் செருப்பைக் கழற்றி என்னை அடிக்க வந்தார். நான் வீட்டைச் சுற்றி மூன்று தரம் ஓடினேன். பின் நாளில் இந்தச் சம்பவத்தை விவரிக்கும்போது நான் இப்படி எழுதினேன். ‘சப்பாத்தை தூக்கிக்கொண்டு ராசகுமாரன் சிண்டரெல்லாவை துரத்தியதுபோல அப்பா என்னை துரத்தினார். எவ்வளவு துரத்தினாலும் ஐயாவின் செருப்பு என் முதுகை சந்திக்கவே இல்லை.’

ஐயாவுக்கு வயதானபோது அவரால் வியாபாரத்தை கவனிக்க முடியவில்லை. நிறுத்தலாம் என நினைத்தார். ஆனால், பொருட்களைக் கடனாக வாங்கியவர்களின் பட்டியல் மிக நீண்டதாகஇருந்தது. எத்தனை முயன்றும் பணத்தை மீட்க முடியவில்லை. கடன்காரர்கள் நெருக்கத் தொடங்கினார்கள்.ஐயாவுக்கு வேறு வழியில்லை. மூன்று தலைமுறை கண்டு வந்தபெரிய காணி ஒன்றை விற்றுகடனை அடைத்தார். அப்பொழுது நான் கணக்காளர் பரீட்சைக்கு படித்துக்கொண்டிருந்தேன். எனக்கு ஒருவாறு விசயம் புரிந்தது. 30 வருடமாக ஐயா செய்த வியாபாரம் நட்டத்தில்தான் ஓடியது. அவர்வியாபாரம்செய்திருக்கவேண்டிய அவசியமே இல்லை. ஆரம்பத்திலேயே காணியை விற்றிருந்தால் அந்தக் காசிலேயே எங்கள் காலத்தை ஓட்டியிருக்கலாம். இதை நான் ஐயாவிற்கு சொல்லவே இல்லை. அவர் மனது கஷ்டப்பட்டிருக்கும். வீட்டிலே ஓர் ஆண்மகன் எப்படி சும்மா இருப்பது? வியாபாரம் செய்வதுபோல ஒரு பாவனை இருக்கவேண்டும். அப்பொழுதுதானே மரியாதை.

ஐயாவுக்கு ஓர் அண்ணர் இருந்தார். பெரிய ஐயா என்று அழைப்போம். அவர் என்ன செய்தார் என்பது தெரியாது.எந்த நேரமும் அவருக்கு ஒரு தேவை இருக்கும். மிக உயரமாக, மேல் சட்டை அணியாமல் முரட்டுத் தோற்றத்தில் காட்சியளிப்பார். கைகளைத் தொட்டால் மரப்பட்டை போல இருக்கும். ஏதாவது உதவி கேட்டு வருவார். ஒரு நாள் இரவு சூள் பிடித்துக்கொண்டுஇலைகளை மிதித்தபடி அவசரமாக வந்தார். அப்பொழுதுதான் முதன் முதலாக சூள் என்னவென்று பார்த்தேன். தென்னம் பாளையை கீறி பற்றவைத்த தீப்பந்தம் அது.ஐயாவுடன் ஏதோ சத்தமாக பேசிவிட்டு யோசனையுடன் திரும்பினார். தீப்பந்தத்தில் அவர் நிழல் பின்னால்விழுந்தது. அது ஏதோ சோகச் செய்தி சொன்னதுபோல பட்டது.

அடுத்தநாள் அதிகாலை பெரும் ஆரவாரம் கேட்டு எழுந்தேன். எல்லோரும் அலறியடித்துக்கொண்டு ஓட நானும் ஓடினேன். தண்டவாளத்தை தாண்டியதும் ஒரு பெரிய மரத்தின் உச்சியில் பெரிய ஐயா தூக்கில் தொங்கினார். அவருக்கு வயது எழுபதுக்கு மேலே. எப்படி அத்தனை உயரம் ஏறினார், எதற்காக தற்கொலை செய்துகொண்டார் என்பது தெரியவில்லை. ஒருத்தருக்கும்கேடு நினைக்காத மனிதப் பிறவி அவர். ஐயாவின் கண்களில் நீர் வழிந்ததை முதல்முறை பார்த்தேன். இரண்டாவது தடவை

அம்மா இறந்தபோது கண்ணீர் விட்டார். பெரிய ஐயாவுக்கு ஏதோ துயரம் இருந்தது. ஐயா அதைத் தீர்த்திருக்கலாம் என்று இப்போது தோன்றுகிறது. மிக உயரத்தில் ஒற்றைக் கயிற்றில் அவர் உடல் ஆடியது மறக்கமுடியாத காட்சியாக நிற்கிறது.

ஒட்டுமாங்கன்று எப்பொழுது காய்க்கும் என்று ஐயா பார்த்துக்கொண்டே இருந்தார். அது காய்க்க முன்னரே ஓர் இரவு தனிமையில் இறந்துபோனார். நாங்கள் எல்லோரும் கொக்குவிலில் கூடினோம். ஐயாவை அவருடைய மரக்கட்டிலில் கிடத்தியிருந்தார்கள். ஒரு காலத்தில் தண்டவாளத்தை ஒரு கையால் தூக்கியவர், ஊரில் பிரபலமான சண்டியனை ஒற்றை விரலால் நெஞ்சில்தொட்டு நிறுத்தியவர். அவர் உடலை பார்த்து திடுக்கிட்டேன். சதைகள் உருகி வெறும் எலும்புக்கூடுதான் எஞ் சியிருந்தது. 31ஆம் நாள் காரியங்கள்முடிந்த பின்னர் ஐயாவின் பெட்டகத்தை திறந்து ஆராய்ந்தபோது சாதகக் கட்டுகளை காணவில்லை. வேறு பொருட்களும் மறைந்துவிட்டன. ஆக மிஞ் சியது கணக்குப் புத்தகம்தான். நான் அதை எடுத்துக்கொண்டேன்.

அப்பொழுது சாட்டர்ட் கணக்காளர் பரீட்சையில் சித்தியடைந்து நான் வேலை பார்த்துக்கொண்டிருந்தேன். ஆகவே, ஐயாவின் கணக்குப் புத்தகத்தைஆராயவேண்டும் என்ற ஆவல் என்னிடம் இருந்தது. கணக்காளர் படிப்பில் ஒற்றை பக்க கணக்கு, இரட்டைப் பக்க கணக்கு என இரண்டு வகை இருந்தது. இரண்டுக்கும் இடைப்பட்ட கணக்குத்தான் ஐயாவுடையது. அவராக உண்டாக்கியது. புத்தகத்தில் சிட்டை கணக்குகள், ரசீதுகள், காசு வரவுகள், செலவுகள், கொடுத்தவர்கள், வாங்கியவர்கள் என சகலதும் இருந்தன. ஆனால், என்னுடைய கணக்காளர் மூளையில் ஒன்றும் ஏறவில்லை. ஒருவருடைய பெயரை எழுதி வெட்டி யிருப்பார். அவர் கடனை தந்துவிட்டாரா அல்லது இறந்துவிட்டாரா?

ஒவ்வொரு மாதமுடிவிலும் கோடு இழுத்து புதிய மாதம் தொடங்கியது. எப்படி இந்தப் புத்தகம் அவருக்கு உதவியது என்பது புரியவே இல்லை. திடீரென்று ஒரு பக்கத்தில் வரவேண்டிய கணக்குகள் இருந்தன. அதிலே 10 - 15 பேர்கள். அந்தக் கடன்கள் வந்தனவா என்றும்தெரியவில்லை. அடுத்த பக்கத்தில் கொடுக்கவேண்டியவர்கள் கணக்கு. பெயர்களை வரிசையாகபடித்துக்கொண்டே வந்தேன். பல பெயர்கள் எனக்கு தெரிந்தபெயர்கள்தான். ஒரு பெயரில் கண் நின்றது. சிறாப்பர் - ரூ 1.00. அதன் பின்னர் என்னால் ஒன்றுமே படிக்க முடியாமல் போனது. புத்தகத்தை மூடினேன். ●

அ. முத்துலிங்கம் <amuttu@gmail.com>

# ஸிந்துஜா கவிதைகள்



1

இருளின் பிரம்மாண்டம்
இருளில் இருக்கிறது.
ஒளிக் கத்தி
எதிர்பாரா வலிமையுடன்
கூராகப் பாய்ந்து
பிளக்க வருகிறது இருளை.

ரத்தமின்றி
ரணகளம் அடைந்து
சாய்கிறது இருள்.
சாய்வு மட்டும்தான்.
சாவு அல்ல.

வெட்டுப்பட்டுத் தடுமாறி
அலைக்கழியும் தருணம்
ஒளியின் கீழ்ப் படரும்
இருளின் குழந்தைகள்.

ஒளி அவற்றை
விரட்டிப் பிடிக்க
ஓடி வரும் பொழுதில்
சிக்காமல்
முன்னேயும்
பின்னேயுமாய்
நகர்ந்து ஆர்ப்பரிக்கின்றன
மழலைக் கூட்டம் .

2

பதைபதைக்கும் வெய்யில்
தெருவில் நிற்கும் இளம்பெண
தாங்க முடியாத கொதிப்பு.
சூரியனால் அல்ல.

3

அமாவாசைக்குக்
காத்திருக்கும்
திருடன்.
தோழனுடன் விளையாட
தெருவில் நிலவொளிக்காய்
அவன் குழந்தை. ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

கரையில் மோதும் நினைவலைகள்-4



# இடப்பெயர்வுகள்

நடேசன்



சிட்னியியில் நியு சவுத்வேல்ஸ் பல்கலைக்கழகத்தில் நான் படித்த காலம் ஒரு வருடமே. புலம்பெயர்ந்த பின் வாழ்வதற்கு புதிய அவுஸ்திரேலியப் பட்டம் தேவையாகவிருந்தது. யாழ்ப்பாணத்தில் இந்துக் கல்லூரியின்விடுதிவாழ்க்கை,பேராதனைப்பல்கலைக் கழகத்தின் நினைவுகள் போல் பசுமையானவையல்ல; என்றாலும், புதிய இடம் கலாச்சாரம் என்பதால் அவை நினைவில் நீங்காதவையே.

இலங்கையின் வடகரையில் எழுவைதீவென்றசிறு தீவில் பிறந்து வளர்ந்து, அமைதியாக ஏழாம் வகுப்பில் படித்த எனக்கு, வங்கக் கடலில் மையங் கொண்ட புயலாக எனது தந்தையார் வந்தார். அதுவரையும் தென்னிலங்கையில் மலையகப் பகுதியில் ஆசிரியராக இருந்தவர். எனது பாடசாலைக்கு வந்ததும் எனது வாழ்வில் சனி பற்றிக்கொண்டது.

குடும்பத்தில் மூத்த பிள்ளை. நான் படித்த பாடசாலை அம்மா வழி பாட்டனார் காலத்தில் தொடங்கியது. அவரே பாடசாலையாசியர். அம்மாவே அந்த ஊரில் தபால் அதிபர். இவற்றால் மற்ற ஆசிரியர்களது மதிப்பும் அன்பும் கிடைத்ததுடன் சிறு வயதில் தொய்வு நோய் வந்ததால் மிகவும் செல்லமாக வளர்க்கப்பட்டேன்.

இந்த எனது நிலை தந்தையார் ஊருக்கு ஆசிரியராக வந்ததும் தலைகீழாக மாறியது. சுதந்திரமான எனது சிறகுகள் கண்டிப்பென்ற பெயரில் வெட்டப்பட்டன. தமிழ் சினிமாபோல் தந்தையாருடன் எட்டு மாதங்கள் பொருதிய பல சம்பவங்கள் இருந்தாலும், இறுதியில் ஒன்று கிளைமாக்சாக என்னை ஊரைவிட்டு போக வைத்தது.

அப்பொழுது எனக்கு 12 வயது. மாமியின் மகள் இரண்டு வயது மூத்தவள், இரண்டு வருடங்களாக யாழ்ப்பாணத்தில் படித்துக் கொண்டிருந்தவள், இடையில் எங்களுருக்கு மீண்டும் படிக்க வந்துவிட்டாள். அவள் வந்த காரணம்: ஊகமாக அவள் தங்கியிருந்த வீட்டின் ஆண் உறவினரது நடத்தையே காரணமென்று பேசப்பட்டது. எனக்கு அதன் காரணங்கள், அர்த்தங்கள் புரியவில்லை. நேரடியாக கேட்டுப் புரிந்துகொள்ள நினைத்தேன்.

ஐப்பசிமாதத்தின்கடைசிவியாழக்கிழமைமதியத்தில் பாடசாலையிலிருந்து திரும்பி வரும்போது பூவரசு மரத்தின் நிழலில் நான் கடித்த அம்பலவி மாங்காயில் அரைப்பகுதியை அவளிடம் கொடுத்துவிட்டு,

“யாழ்ப்பாணத்து நல்ல படிப்பை விட்டு ஏன் வந்தாய்? அங்கு மாமா என்ன செய்தார்?” காரணத்தை அவளிடம் சீரியசாக, இடையில் வழுவிய அரைக்கால் சட்டையை ஒரு கையால் பிடித்தபடி நேரடியாக கேட்டேன்.

பதின் மூன்று வயதான அவள், அப்பாவியாக ஒரு கன்னத்தில் மட்டும் குழிவிழசிரித்துவிட்டு, மாங்காயில் ஒரு காக்காய்கடி கடித்துவிட்டு என்னிடம் தந்தாள். ஆனால், பதில் சொல்லாது போய்விட்டாள். அந்த ஊர்க்கதையை எனக்கு சொன்ன நண்பன் வாயை மூடியபடி சிரித்தான். அந்த நிகழ்வை அத்துடன் நான் மறந்து போய்விட்டேன்.

அடுத்த நாள் வெள்ளிக்கிழமை. எல்லோரும் காலையில் பாடசாலை தொடங்கமுன் கோயிலுக்கு போய்விட்டு வரிசையாக வந்தார்கள். நான் இறுதியாக வந்தபோது பாடசாலைக் கட்டிடத்தின் அரைச்சுவருக்கு மேலால் தெரிந்த காட்சி இன்றும் திரைப்படம் போல் மனதில் பதிந்துள்ளது.

வெள்ளை மேல் சட்டையுடன் கருப்புக் கோடுபோட்ட பச்சை லங்கா பருத்திச் சேலையை இறுக்கி கட்டிய மாமி, உடலில் துணியற்ற ஆறுமாதக் ஆண் கைக்குழந்தையை இடுப்பில் வைத்தபடி, வகுப்பு மேசையருகில் நின்று கதிரையில் உட்கார்ந்திருந்த எனது தந்தையிடம் கண்ணகியாக நியாயம் கேட்டார். கையில் சிலம்பு மட்டுமே மிஸ்சிங். ஆனால், கேட்ட கேள்வி: நீயும் காவலனோ என்பதுபோல், “வாத்தி இதுதானா உனது மகனுக்கு படிப்பிக்கிறாய்?” என்றபோதுஎனக்குவிடயம்புரிந்துவிட்டது.ஏற்கனவே தந்தையாரிடம் சொல்லப்பட்ட விடயம் அவரிடம் மேலும் உருவேற்ற மீண்டும் காட்சியாக்கப்பட்டிருக்கு என்பது எனது மூளையில் உறைத்தது.

“இங்கே வாடா” என்று அழைத்ததும் பூனையிடம் அகப்பட்ட எலியாக மாறினேன்.

எனது தந்தையார் பிரித்தானிய இராணுவத்தில் மூன்று வருடமிருந்தவர். இருபத்தைந்து வயதில் நான் இருந்தபோதும் ஐம்பத்தைந்து வயதில் அவரின் உடற்பலம் என்னில் இல்லை. கொக்கு, எலும்பன் என பல பட்டப் பெயர்கள் எனது உடல் திண்மைக்காக நண்பர்கள் வைத்தது.

எனது எலும்புகளை இன்று நிலத்திலிருந்தே பொறுக்கவேண்டும் என எண்ணியபடி அவர் முன் உறைந்திருந்தேன். அவர் எழுந்து, எனக்கு கன்னத்தில் ஓங்கி அடிக்க, நான் குனிய அந்த அடி என் தலையில் விழ, நான் கரும்பலகையில் சாய, கரும்பலகை வெட்டிச் சாய்த்த மரத்தின் ஓசையோடு கீழே விழுந்தது. இப்படியாக ஏற்பட்ட தொடர் நிகழ்வால் ஏற்பட்ட தாமதத்தால் அவரால் என்னை உடன் பிடிக்க முடியவில்லை. மீதியாக வைத்திருந்த அடிகள் நினைவுகளாகவே எஞ்சின. அந்தச் சந்தர்ப்பத்தைப் பாவித்துநான்பாடசாலையின்பெஞ்சுகள், கதிரைகள், சுவர்கள்முதலானதடைகளைத்தாண்டிவீட்டுக்குஓடி வந்து அம்மாவிடம் அகதியானேன். எக்காலத்திலும் அகதி விண்ணப்பம் நிராகரிக்கப்படாத ஒரு இடம்.

அம்மாவிடம் விடயத்தைச் சொன்னதும், “அவள் வேசை, அவள் யார் என்ர பிள்ளையை பற்றி குறை சொல்ல? இந்த மனிதனுக்கு மூளையில் என்ன இருக்கு?” என்று எழுத முடியாத பல வார்த்தைகளை பேசிவிட்டு, “இனி இந்த ஓட்டைப் பாடசாலை தேவையில்லை. யாழ்ப்பாணம் போய்படி மகனே” என்றார்.

அன்றிலிருந்து ஒன்றரை மாதம் எந்த பாடசாலையும் போகவில்லை. அத்துடன் யாழ்ப்பாண இந்துக் கல்லூரியில் சேர்வதற்கு பரிட்சை எழுதியதும் அங்கு எடுபட்டேன். மூன்று வருடங்கள் என் விடுதி வாழ்வு இனிமையானது. இராணுவம், இயக்கங்கள் முளைக்காத சொர்க்க பூமி அக்கால யாழ்ப்பாணம்.

வீட்டில் இருந்து ஞாயிறு மாலையில் இந்துக் கல்லூரியின் விடுதியை அடைந்ததும் மற்றைய மாணவர்கள் எனது உடைகளை பரிசோதிப்பார்கள். காரணம்: நான் வீட்டிலிருந்து பணம் கொண்டு வந்தேனா என்பதற்காக அந்தப் பரிசோதனை. அவர்களுக்கு பணம் கிடைத்தால் அன்று சிற்றுண்டி, சினிமா செலவுக்காக பயன்படும்.

அப்படி பணம் கிடைக்காதபோது எனது சப்பாத்தை கழட்டி சொக்ஸ் உள்ளே பார்க்க முயல்வார்கள். அப்படியான ஒரு நாள் அவர்களில் ஒருவன், “அவன் தீவான். அவன் காலின் பித்த வெடிப்புக்குள் மணல்தான் இருக்கும்” என்றான்.

அது நகைச்சுவைக்காக சொல்லப்பட்டது. சொல்லியவன் எமது ஊருக்கு அடுத்த பகுதியான வேலணையிலிருந்து வந்தவன். அந்த வார்த்தைகளில் புவியியல் சார்ந்த உண்மை உள்ளது.

இலங்கையில் யாழ்ப்பாணத்தின் பெரும்பகுதி ஒரு காலத்தில் கடலின் கீழ் முருகை கற்பாறைகளாக (Coral Reef) இருந்து மேல் வந்த இடம். பிற்காலத்தில் அந்தப் பாறைகள் உடைந்து மண்ணாகியது. அங்கு காற்றில் இருந்து உணவு தயாரிக்கும் பாசி போன்று தாவரங்கள் உருவாகி பின்பு அவை சிதைந்து பயிர்கள் விளையும் மண்ணாகியது. அப்படியான உருவாக்கம் நடைபெற பல இலட்சக்கணகான வருடங்கள் செல்லும். அப்படியான மாற்றம் நடைபெறும் இடங்களை புவிப்பந்தின் இறுதியாகத் தோன்றிய நியூசிலாந்தின் வட தீவில் பார்த்தேன்.

இடையில் ஒரு கேள்வியைக் கேட்காது போகலாமா?

கல் தோன்றி மண் தோன்றாத காலத்தில் வாழ்ந்த எமது தமிழர்கள் - அக்கால யாழ்ப்பாணத்தில் எப்படி உணவு உண்டார்கள்? உணவு பயிரிட முடியாத நிலம். புல், தாவரங்கள் முளைக்காத நிலமது. ஆடு, மாடு வளர்க்க முடியாது. அப்படியானால் அக்காலத்தில் மக்கள் மீன் மட்டுமே உண்டிருக்க முடியும். இதனால், ஆரம்பத் தமிழர் மீனவர்கள் எனவும் மீனை மட்டும் உண்பவர்கள் எனவும் கொள்ளலாமா?

எனது பித்தவெடிப்பில் மணல்போல், அவுஸ்திரேலியாவிலும் ஆதிவாசிகள் காலைப் பார்த்தல் சிவப்பாக இருக்கும். பெரும்பாலான அவுஸ்திரேலிய நிலப்பரப்பை ஆகாய விமானத்தில் இருந்து பார்த்தாலும் சிவப்பாக இருக்கும். காரணம்:



அங்கு நிறைந்துள்ள இரும்புத்தாதே. அதை வெட்டி எடுத்து உலகம் முழுவதும் விற்று தற்பொழுது வசதியாக வாழ்கிறோம். வெள்ளையருக்கு முன்பு வியாபார நோக்கத்துடன் அவுஸ்திரேலியாவை கடலால் சுற்றி பார்த்த ஒல்லாந்தர், போர்த்துக்கேயர் இங்கு ஒன்றும் பிரயோசனமானது இல்லை எனப் போய், பக்கத்தில் உள்ள கிழக்குத் தீமோர், இந்தோனேசியா என்று தங்கள் காலனிகளை அமைத்ததார்கள்.

பின்னர் தங்கள் நாட்டு குற்றவாளிகளை குடியேற்ற மட்டுமே நிலம் தேடிய பிரித்தானியர்கள், அவுஸ்திரேலியாவைக் கண்டுகொண்டார்கள். இவ்வளவு இரும்புக் கனிமம் இருந்தும் ஆதிவாசி மக்கள் கற்காலத்திற்கு அப்பால் போகவில்லை. காரணம், அவர்களுக்கு எதிரிகளோ தேவைகளோ இல்லை. காட்டில் கிடைத்த உணவே போதுமானது. பயிரிடத் தேவையில்லை. படைக்கலங்களும் விவசாய உபகரணங்களும் செய்வதற்கே மற்றைய நாடுகள் இரும்பைப் பாவித்தார்கள்.

பேராதனையில் மிருக வைத்தியம் படித்தபோது மைக்ரோபயாலஜி என்ற பாடத்தில் மூன்று தரம் பேராசிரியர் மகாலிங்கத்தால் குண்டடிக்க வேண்டி யிருந்ததால், அந்த மைக்ரோபயாலஜியில் எனது ஆய்வை செய்ய விரும்பினேன். ஆனால், எனக்கு கிடைத்த அந்த பகுதி புதுமையானது.

இரும்புக் கனிமத்தை நிலத்தில் அகழ்ந்ததும் அதை உருக்கி இரும்பைப் பிரித்தெடுப்பார்கள். அந்த செய்முறையில் அதிக இரும்புள்ள கனிமத்திற்கே பொருளாதாரரீதியில் இலாபம் கிடைக்கும். குறைந்த இரும்புள்ள கனிமத்தை தரையில் கொட்டிவிட்டால் அந்த இடத்தில் ஒரு சாதிப் பக்டீரியாவால் (Thiobacillus Ferrooxidans) அமிலமும் இரும்பும் செப்பும் உருவாகி அந்த இடம் முழுவதும் எதற்கும் உதவாத இடமாகும். அங்கு புற்கள் முளைக்காது. இதுவே அவுஸ்திரேலியாவில் பலகாலமாக நடந்தது. தற்பொழுது குறைந்த இரும்புள்ள கனிமத்தை மீண்டும் புதைத்து நிலத்தை மண்ணால் மூடுகிறாரகள். மேலே புற்கள் முளைக்கும். சிறுமரங்கள் நடுவார்கள்.

எப்படி குறைந்த இரும்புள்ள கனிமங்களில் பக்டீரியாவைப் பாவித்து இரும்பை பிரித்தெடுக்க முடியும் என்பதே எனது ஆய்வு. அதிலும் இப்படியான கனிம வளமுள்ள நிலங்களில் நல்ல தண்ணீர் கிடையாது. மேலும், அவுஸ்திரேலியாவின் நடுப்பகுதி ஆதிகாலத்தில் கடலால் பிரிக்கப்பட்டிருந்தது. அதனால் உவர்ப்பான தண்ணீரில் இந்த பக்டீரியாக்கள் வளர இசைக்கமடையுமா என்பதே ஆய்வின் நோக்கம்

இந்த ஆய்வு வேலைகளை செய்து கொண்டிருந்த காலத்தில் ஒரு பொது வேலையிலும் ஈடுபட்டேன்; மனித உரிமைகள் சம்பந்தமானது. சில சிங்கள நண்பர்களையும் மற்றும் எனது நண்பரான டாக்டர் நரேந்திரநாதனையும்சேர்த்துமனித உரிமைக்கழகத்தை உருவாக்கினோம். அக்காலத்தில் பிஜியில் நடந்த இராணுவ புரட்சியின் காரணமாக பல இந்தியர்கள், அவுஸ்திரேலியாவுக்கு தப்பி வந்தனர் அதேபோல் 87-90இல் இலங்கை இராணுவத்தினர் ஜனதா விமுக்தி பெரமுனையினரை வைகைதொகையற்று கொலை செய்தர்கள். அக்காலத்தில் அவுஸ்திரேலியாவில் தொழிற்கட்சியிருந்ததால் எங்களால் மந்திரிகள் எம்.பி.க்களை சந்திக்க முடிந்தது. நாட்டின் இந்த நிலமையைப் பற்றி பேசமுடிந்தது. அதன் காரணமாக சில நன்மைகள் ஏற்பட்டது.

அக்காலத்திலோ, வார விடுமறையில் இரவுகளில் ஒரு பஞ்சாபி உணவகத்தில் சேர்ந்து கழுவுதல், துடைத்தல் வேலைகளை செய்தேன். ஆனால், இறுதிவரையும் சப்பாத்தியை வட்டமாக என்னால் போடமுடியவில்லை. தோல்வியை ஒப்புக்கொண்டு அந்த வேலையில் இருந்து விலகவேண்டியதாக இருந்தது.

ஒருவருடத்தில்எனதுஆய்வுகள்பூர்த்தியாகிவிட்டது. பட்டமும் கிடைத்தது. வேலையில்லை! மனைவியும் படித்துக் கொண்டிருந்தார்.

இலங்கையில் நல்ல வேலை, கார், வீடு என சகல வசதி இருந்தும் உயிர்ப் பயத்தால் கப்பலேறியதை நினைத்துப் பார்க்காமல் இருக்க முடியாது. அத்துடன் என்னை சுற்றி கண்ணுக்குத்தெரியாதவலையாகவிருந்த அரசியலிலும் இருந்து தப்பி ஓடமுடியாது.

தலைமன்னாரில் இருந்து இராமேஸ்வரம் செல்லும் கப்பலின் மேல்தட்டில், 84 ஏப்ரலில் என்னுடன் மேலும் சிலர் இருந்தார்கள். அவர்கள் கொண்டுவந்த மூட்டை முடிச்சுக்கள் அவர்களை மலையகத்தில் இருந்து வந்தவர்களாக அடையாளம் காட்டியது.

கண்ணுக்கு எட்டியதாகவிருந்த மன்னார் கடற்கரையை முற்றாக மறையும் வரையும் தொடர்ச்சியாக பார்த்துக் கொண்டிருந்தேன். கலங்கிய கண்களும் கனத்த இதயமும் கொண்டவனாக மனதை அசைபோட்டேன்.

நாட்டை விட்டு வெளியேறும் பலர் வியாபாரம், உல்லாசப் பயணம் முதலான காரணங்களால் பிரியும்போது அந்தப் பயணம் உணர்வு கலந்தது அல்ல. ஆனால், நான் இப்போது வெளியேறும்போது எனது நாடு,மக்கள்,உறவினர்முதலானபந்தங்கள்அறுபடுகிறது. எட்டு மாத கர்ப்பிணியான மனைவியையும் இரண்டு வயதே நிரம்பாத மகனையும் விட்டு எதற்கு பரதேசம் போகிறோம் என்பது தெரியாமல் எனது பயணம் தொடங்குகிறது. குருட்டுப் பூனை இருட்டில் பாய்வது போன்றதுஇந்தப்பயணம்.கண்ணுக்குஎட்டியவரையும்

கடலாகத் தெரிந்தது பாக்கு நீரிணை.

எவருக்கும் நாட்டைவிட்டு வெளியேறுவது என்பது இலகுவான விடயமல்ல. சுற்றம், நண்பர்கள் என்ற புறக்காரணிகளோடு அனைத்திலும் வெறுப்பை ஏற்படுத்த வேண்டும். ஆனால், அது எனக்கு சாத்தியம் அல்ல; நாம் இருக்கும் நாட்டை வெறுப்பது. அதிலும் அரசாங்க வேலை. மனைவிக்கு வீட்டுக்கு பக்கத்தில் வேலை. பிள்ளைகளைப் பார்க்க மாமா, மாமி என சகல வசதிகளோடு இருந்த எனக்கு இந்தியப் பயணம் எனக்கே புரியாத புதிராக இருந்தது. எனக்கே புரியாதபோது எனது அம்மா, சகோதரங்களுக்கோ, மனைவி, மாமா, மாமிக்கோ எப்படிப் புரியும்?

மதவாச்சியில் 83 இனக்கலவரத்தின்போது வேலை செய்துவிட்டு அதன்பின் மூன்று மாதங்களை ஏதும் செய்யாமல் செலவிட்டேன். 1983 நவம்பர் மாதத்தில் இராகலையில் அரசாங்க மிருக வைத்தியராக வேலைக்குச் சேர்ந்தேன். இராகலை சென்றதும் புது அனுபவமாக இருந்தது. வறட்சியான யாழ்ப்பாணத்தில் பிறந்து வளர்ந்த எனக்கு குளிர்பிரதேசம் மாற்றமாக இருந்தது. ஆனால், நான் அதற்குத்தயாராகச்செல்லாதபடியால்முதல்இரண்டு நாட்கள் குளிரில் நித்திரை கொள்ள முடியவில்லை. பின்புநுவரேலியாவில்எனதுநண்பனதுகுவாட்டர்சில் சென்றுதங்கினேன்.அதன்பின்குளிருக்கானபெட்சீட், கம்பளி உடைகளோடு ராகலை வந்து சேர்ந்தேன்.

ராகலையில் எனக்குப் பிடித்தவிடயம் 83 ஜூலைக் கலவரத்தில் எதுவித பாதிப்பும் தமிழர் கடைகளுக்கு ஏற்படவில்லை. இதற்குக் காரணம், அந்தப் பகுதி பாராளுமன்ற அங்கத்தவரும் நுவரேலியா மாவட்ட அமைச்சருமான ரேணுகா ஹேரத். கலவரம் நடந்த மூன்று நாட்களும் இரவு பகலாக கணவனுடன் ஜீப்பில் சென்று தீயசக்திகள், கடைகளுக்கு தீவைப்பதை தடுத்தார். இவ்வளவுக்கும் ரேணுகா ஹேரத்திற்கு முப்பது வயதுதான் இருக்கும்.

அதேவேளையில் சில கிலோமீட்டர் தொலைவில் இருக்கும் நுவரெலியாவில் அமைச்சர் இராஜதுரையின் மகள் டொக்டராக வேலை பார்த்தார். அவரை ஹெலிகப்டரில் ஏற்றிக்கொண்டு அப்போதைய பெருந்தோட்ட அமைச்சர் காமினி திசநாயக்க சென்றதன் பின்னர் நுவரேலியா கடைவீதிகளுக்கு தீ வைக்கப் பட்டது. இதற்குக்கூட இனவாதம் காரணமில்லை. அக்காலத்து அமைச்சர் தொண்டமானுக்கும் காமினி திசநாயக்காவுக்கும் இருந்த தொழிற்சங்க போட்டியே காரணம். இருவரும் இரண்டு தொழிற்சங்கங்களுக்கு தலைமை வகித்ததால் வந்தவினையாகும். இப்படி இலங்கையில் பல விடயங்களுக்கு அரசியல்வாதிகளே காரணம். மூவின மக்களைப் பொறுத்தவரையில் அமைதியான வாழ்வையே விரும்பினார்கள்.

ராகலை சூரியகாந்தித் தோட்டத்தில், 84ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் நடந்த சம்பவம் எனது பயணத்திற்கு உடனடிக் காரணமாக இருந்தது.

எனது மிருகவைத்திய அலுவலகம் சூரியகாந்தித் தோட்டத்தில் இருந்தாலும் தொழிலாளர் குடியிருப்புகளுக்குசற்றுவிலகியேஅமைந்திருந்தது.எனதுதங்குமிடம் அந்த கட்டிடத்தின் ஒரு அறையேயாகும். மலையகத்து காலை நேரம் மிகவும் இரம்மியமானது. ஈரமுகில்களால் போர்த்தப்பட்டு இரவில் நனைந்த தேயிலைச்செடிகள் கண்ணுக்கெட்டிய தூரம்வரை பரந்திருக்கும். இடைக்கிடையே தொழிலாளர் குடியிருப்புகள், மற்றைய உத்தியோகத்தர்களது இல்லங்கள் பச்சை வண்ண கம்பளத்தில் புள்ளிகள் போடும். தூரத்து மலைகளில் படிந்திருந்த சோம்பேறியான முகில்கள் மெதுவாக கலைவதும் கண்களுக்கு இதமானவை. தேயிலைத் தொழிற்சாலையில்வறுக்கப்படும்தேயிலைத்துளிர்களில் இருந்து பரவும் நறுமணம் காற்றோடு கலந்துவரும். அந்த காலை வேளையை சிறிது நேரம் இரசித்துவிட்டுத்தான் எனது வேலையைத் தொடங்குவேன்.

காலைப்பொழுது புலரும்வேளையில் எழுந்து பார்த்தால் தொழிலாளர்களது குடியிருப்புகளின் கூரை யிலிருந்து எழும் புகை தெரியும். ஆனால், நான் அன்று பார்த்தது அவர்களின் அன்றாட சமையலின்போது வரும் புகையல்ல. பல காம்பராக்களில் கூரைகளைக் காணவில்லை. விடயத்தை ஆராய ஆவலாக இருந்ததால் எனது உதவியாளரான இரத்தினத்தை எதிர்பார்த்திருந்தேன். இரத்தினம் அந்தத் தோட்டத்தில் வசிப்பது எனக்குத் தெரியும்..

இரத்தினம் சிறுதி நேரத்தில் கலவரமான முகத்துடன் வந்தான். 'இரவு நடந்தது தெரியுமா?' எனக் கேட்டான்.

'இல்லையே.'

'நடு இரவில் சிங்களவர்கள் கிராமத்தில் இருந்து வந்து நெருப்புவைத்துவிட்டார்கள்.தொழிலாளர்கள்எல்லாம் குடும்பத்துடன் தேயிலை செடிகளுக்கு மறைவிலும் மலைப்பாறை இடையிலும் பதுங்கி இருந்துவிட்டு இப்பதான் வருகிறார்கள்.'

'என்ன நடந்தது?'

'சின்னத்துரையை ஒரு தொழிலாளி குத்தியதால், குத்துவாங்கியசின்னத்துரைசிங்களகிராமத்தவர்களிடம் போய் சொல்லியதால், இந்த காம்பரா எரிப்பு நடந்தது.'

மேலும் அவனைத் துருவியபோது, தோட்டத்தில் நிர்வாகியாக சுப்பிரிண்டனும் அவருக்கு உதவியாக ஒருவரும் இருப்பார்கள். உதவியாக இருப்பவரை சின்னத்துரை என அழைப்பார்கள். சின்னத்துரை தொழிலாளியின் மனைவியை பாலியல் சேட்டை செய்ததால் தொழிலாளியால் குத்தப்பட்டான்.

தமிழ்த் தொழிலாளிகள் இரவில் மனைவி குழந்தைகளுடன் சென்று மலைகளிலும் புதர்களிலும் ஒளித்தனர். இந்தத் தோட்டத்தின் மத்தியில் அமைந்தது ராகலைமிருகவைத்தியசாலை.தொழிலாளிகள்தேயிலைக் கொழுந்துகள் கிள்ளுவதோடு மாடுகள் வளர்த்தும் பால் கறந்து விற்றும் ஜீவனத்தை நடத்தியவர்கள். இவர்கள் எல்லோரும் பால் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கத்தில் அங்கத்தவர்கள். கிராம பால் கூட்டுறவு சங்கத்திற்கு நான் தலைவரானதால் இவர்களோடு எனக்கு தொடர்பு உள்ளது. இப்படியான தொடர்புகள் இருந்ததால் இரத்தினத்தோடு சென்று தொழிலாளிகளிடம் பேசினேன். அவர்களது துன்பங்களை விசாரித்த போது அவர்களது பயங்களை உணர்ந்தேன்.



இலங்கையில் சிறிய தகராறு இனக்கலவரமாகியது. சூரியகாந்தி தோட்டத்தை சுற்றிய கிராமங்களில் வசிப்பவர்கள் சிங்கள மக்கள். தமிழ்த் தொழிலாளி, சின்னத்துரை என்ற சிங்களவரை குத்தியது என சின்னத்துரை கிராம மக்களிடம் சென்று சொன்னதால், தமிழன் சிங்களவனை குத்தியதாக தகவல் பரவி இனப்பகையாகியது.

'பறதெமலோ பலயாங்' என்றபடி அன்று தோட்டத்து காம்பராக்களை சிங்கள கிராமவாசிகள் எரித்தனர்.

நான் தமிழ்த் தொழிலாளர்களிடம் சென்று பேசியதால் 'கொட்டியா' என சிலரால் அழைக்கப்பட்டேன். இந்த கொட்டியா (புலி) என்ற சொல் பெரும்பாலானவர்களால் தமிழர்களுக்கு எதிராக பாவிக்கப்பட்டது. நான் அதைப்பற்றி ஆரம்பத்தில் பொருட்படுத்தவில்லை. ஆனால், பின்பு என்னை நுவரேலியா பொலிஸ் நிலயத்திற்கு அழைத்து விசாரிக்க இருப்பதாக என்னோடு வேலை செய்த சிங்கள இனத்தவர் ஒருவர் மூலம் தகவல் தெரிந்தது.

சித்திரை வருடப்பிறப்பிற்கு யாழ்ப்பாணம் செல்ல நினைத்திருந்தபடியால் அப்படியே கொழும்பு சென்று இந்திய விசா எடுத்தேன்.

சூரியகாந்தி தோட்டத்தில் நடந்த கலவரம் மட்டுமா என்னை வெளியேறத் தூண்டியது?

நிச்சயமாக என்னை பொலிஸ் விசாரித்தாலும் பிரச்சினை வந்திராது. வருடப் பிறப்புக்கு வீடு செல்ல முயன்ற போது, எனது மேலதிகாரி இந்தப் பகுதியில் பல மிருக வைத்தியர்கள் லீவில் நிற்பதால் லீவு தரமறுத்தார். உடனே, கண்டியில் உள்ள மேலதிகாரியிடம் பேசி லீவெடுப்பேன் என்று நான் சொன்னது அவருக்கு ஆத்திரமூட்டியது.

இந்தக் காரணங்கள் மட்டுமல்ல. நிச்சயமாக இதற்கும் மேலான காரணங்கள் இருக்கவேண்டும்.

இந்தியாவில் தமிழ் இளைஞர்களுக்கு இந்திய அரசாங்கத்தால் பயிற்சியளிக்கப்படுகிறது என்ற தகவல் பல பத்திரிகைகளில் வந்திருந்தது. இலங்கையின் தென்பகுதியில் வேலை செய்துகொண்டு எதிர்கால சரித்திரத்தில் பிழையான இடத்தில் நின்று விடுவேனோ என்ற பயம் வந்தது. இவ்வளவுக்கும் நான் அரசியலில் பெரிதளவில் ஈடுபட்டவன் அல்ல.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் படித்து முதல்முறையிலேயே பல்கலைக்கழகம் பிரவேசித்தபின் எனது வாழ்க்கை ஒழுங்காக நகர்ந்தது.

இலங்கையில் இன ரீதியான பிளவு ஏற்படுவதிலும் எனக்கு உடன்பாடில்லை. ஏராளமான சிங்கள, இஸ்லாமிய நண்பர்கள் எனக்கு இருந்தார்கள். இனம் - மதம் என்பவை எங்களுக்கு நாங்களாக போட்ட கவசங்கள் என்பது புரிந்தவன். ஆனால், அக்காலப்பகுதியில் எனது வயதையொத்த இளைஞர்கள் அரசியல்சாயம் படாமல் தப்பமுடியாது. ஹோலி பண்டிகை காலத்தில், ஹோலி பண்டிகையை கொண்டாடாதவனும் வர்ணத்தை பூசிக்கொள்வது போல் அரசியல் வாடை என்னைத் தழுவியது.

நான் பன்னிரண்டாம் வகுப்பில் படித்த காலத்தில் யாழ்ப்பாணத்தில்நாலாம்உலகதமிழ்ஆராய்ச்சி மகாநாடு நடந்தது, அப்போது நடந்த நிகழ்வுகள் என் மனதில் பசுமரத்தாணியாக பதிந்திருக்கிறது.

பதினொருவர் இறந்த நாளுக்கு முதல் இரவு (2-01-1974) மூவர் இறந்தனர். இவர்களின் இறப்புக்கு நான் சாட்சியாகினேன். இரவு 8 மணியளவில் மீன்களைப் போல் வடிவமைக்கப்பட்ட அலங்கார ஊர்தி யாழ்ப்பாணம் ஆஸ்பத்திரி வீதியால் வந்து கொண்டிருந்தது. வீதிக்குமேலாகசெல்லும் மின்வயரில் ஊர்தி முட்டியவுடன் மின்சாரவயர் அறுந்தது, அந்த இடத்திலே மூவர் இறந்தார்கள். வயர் அறுந்த போது மின் வெளிச்சம் அணைந்தாலும் நான் நின்ற இடத்துக்கு

அருகில் தரையில் போட்ட மீன் போல் ஒருவர் துடித்து இறந்ததை என்னால் பார்க்க முடிந்தது. எங்கள் ஊரில் வலையில் சிக்கி மீன்துடிப்பதைப்போல் இருந்தது அவரது மரணம். ஏற்கனவே இறந்தவர்களை பார்த்து இருக்கிறேன். ஆனால், கண்முன்னே நான் பார்த்த முதலாவது இறப்பு என்ற செயல் கோரமாக நிகழ்ந்தது. அதிர்ச்சியுடன் வீடு சென்றேன்.

அடுத்தநாள் மகாநாட்டின் கடைசிநாள். ஞானம் மாஸ்ரரிடம் பௌதிகம் பாடம் படித்துவிட்டு நாங்கள் ஐந்து பேராக மாலைநேரம் மகாநாடு நடக்கும் இடத்துக்குச் செல்ல எண்ணினோம். ஞானம் மாஸ்டர் மகாநாட்டு குழுவில் ஒருவராக இருந்ததால் வகுப்பு சீக்கிரம் முடிவடைந்தது.

சைக்கிளை மணிக்கூட்டு கோபுரத்தருகே வசிக்கும் எனது நண்பன் இரத்தினகாந்தனின் வீட்டில் விட்டுவிட்டு அவனுடன் வீரசிங்கம் மண்டபத்தை நோக்கிச் சென்றோம். மக்கள் கூட்டம் எங்கும் நிறைந்து வழிந்தது, வடமாகாணத்தில் வசிப்பவர்கள் எல்லோரும் அங்கு வந்துவிட்டார்களா என நினைத்தேன்.

முனியப்பர் கோயில், புல்லுக்குளம் போன்ற பகுதிகள் எமக்குத் தண்ணிபட்ட பாடமானதால் விரைவாக வீரசிங்கம் மண்டபத்தை அடைந்தோம். மண்டபத்தின் முன்னிலையில் மேடை போடப்பட்டிருந்தது, நாங்கள் அந்த மேடையின் பின்னால் நின்றோம்.

மேடையில் பலர் பேசினார்கள். ஆனால், அமிர்தலிங்கம் பேசும்போது மக்கள் ஆர்ப்பரித்தார்கள். அமிர்தலிங்கம்பேசிமுடித்தவுடன் ஒருவர் மேடையில் ஏறினார். அவரை ஜனார்த்தனன் என மக்கள் கூறினார்கள். இரா. ஜனார்த்தனன் இலங்கைக்கு வருவதற்கு இலங்கை அரசாங்கம் விசா கொடுக்கவில்லை என்ற விடயம் எமக்கு முன்பு தெரிந்திருந்தது. எங்களுக்குப் பக்கத்தில் இருந்த ஒரு சிலர் இவர் வள்ளத்தில் வந்தார் எனக் கூறினார்கள்.

பேராசிரியர் நைனார் முகம்மது பேசிக் கொண்டிருக்கும்பொழுது மக்கள் ஜனார்த்தனன் பேசுகிறார் என ஆர்ப்பரித்தார்கள். அப்போது கண்ணாடிகள் நொருங்கும் சத்தம் கேட்டது. அத்துடன் கண்ணீர் புகை குண்டுகளும் எம்மத்தியில் விழுந்தன. சுடுகிறாங்கள், சுடுகிறாங்கள், நிலத்தில் படுங்கள் என பலர் சத்தமிட்டார்கள்.

நான் படுத்ததால் எனக்கு மேல் குறைந்தது பத்துப்பேராவது படுத்திருப்பார்கள். திடீரென்று லைட்டுகள் அணைந்தன. எங்கும் கூக்குரலும் அலறலும் எதிரொலித்தது, இருட்டில் நடப்பது தெளிவாகத் தெரியவில்லை. எனக்கு மேல் படுத்தவர்கள் எழும்பிய பின்பு நானும் எழும்பி கண்ணீர்ப் புகையில் எரியும் கண்களை கசக்கியபடி பார்த்தேன். மண்டபத்தின் முன்பகுதியில் நான் நின்ற இரும்பு கேட்டால் அமைக்கப்பட்ட பகுதியில் எவரும் இல்லை. கேட்டை கடந்து செல்ல முயற்சிக்கும் போது கேட்டின் மேல் இருவர் சடலங்களாக தொங்குவது தெரிந்தது, இது என்றோ ஒருநாள் பார்த்த ஆங்கில சண்டைப் படத்தை நினைவுக்கு வந்தது.

மின்சாரவயர் ஒன்று பக்கத்தில் கிடந்தது. கேட்டிலும் மின்சாரம் பாயலாம் என்று நினைத்து கேட்டின் மேல் பாய்ந்து யாழ்ப்பாணம் தபால் நிலையம் நோக்கி ஓடினேன். என்னுடன் வந்த நண்பர்கள் எங்கு சென்றார்களோ எனக்குத் தெரியாது. தபால் நிலையத்தில் ஒரு தாயும் சிறுமியும் என்னுடைய கையைப் பிடித்தபடி சேர்ந்து கொண்டார்கள். அவர்களையும் இழுத்துக்கொண்டு கொட்டடிப் பக்கமாக ஓடினேன். கொட்டடியில் திறந்து இருந்த ஒரு வீட்டினுள் அவர்களை இருந்துவிட்டுப் போகும்படி கூறிவிட்டு, தட்டாத் தெரு சந்தியை நோக்கி ஓட்டமாக வந்து வீட்டை அடைந்தேன். இரவு கண்ணீர் புகை ஓட்டம் என்பனவற்றால் சாப்பிட முடியவில்லை. பாலை மட்டும் குடித்துவிட்டு படுத்தேன்.

அடுத்தநாள் காலை சைக்கிளை எடுக்க மீண்டும் சென்றபோதுஎம்மில்சிலரோடுமுதல்நாள்இரவுச்சம்பவம் தொடர்பாக உரையாடினேன். வீரசிங்கம் மண்டபத்தின் முன்னால் செருப்புகள் மலைபோல் குவிந்திருந்தது, பலருடன்பேசியதில்கிடைத்தவிபரமாவது:பேராசிரியர் நைனார் முகம்மதுவை மேடையில் பார்த்தவுடன், அவரைஇரா.ஜனார்த்தனன்எனநினைத்துஎஸ்.பி.சந்திர சேகராவின் கட்டளையின்படி பொலிசார் மேடையை நோக்கி வந்தபோது, ஆத்திரம் கொண்ட மக்கள் பொலிசார் மீது செருப்புகளை வீசினர். இதைத் தொடர்ந்து பொலிசார் கண்ணீர்ப் புகை குண்டுகளை மக்களுக்குஎறிந்ததோடு,துப்பாக்கியால்மேல்நோக்கியும் சுட்டார்கள். துப்பாக்கி வேட்டு மின்சார வயரை தாக்கியதால் வயர் அறுந்து மின்சாரம் தாக்கி சிலர் இறந்தார்கள்.

இந்தத் தகவல்கள் முற்றாகச் சரியா எனக் கூற முடியாது. ஆனால், அரசாங்கமோ தமிழ் தலைவர் களோ வேறுவிதமாக சொல்லவில்லை. விசாரணை வைக்கவில்லை. சிவகுமாரன், எஸ்.பி. சந்திர சேகராவை குண்டெறிந்து கொல்ல முனைந்ததற்கும் இந்தத் தமிழ் ஆராய்ச்சி மகாநாடுதான் காரணமாகும்.

இந்தியாவில் இராமேஸ்வரக்கரையை அன்று மாலை கப்பல் தொட்டதும், அடுத்து என்ன செய்வது என்று தெரியவில்லை. கையில் ஐநூறு அமெரிக்கன் டொலர் இருந்தது. இந்தியப் பணம் எதுவும் இருக்கவில்லை. வெளியே வந்த என்னை பலர் சூழ்ந்து கொண்டு, ‘என்ன சார் இலங்கையில் இருந்து கொண்டு வந்நீர்கள்?’ எனக்கேட்டனர்.

உயிர்ப் பயத்தையும கவலைகளையும் கொண்டுவந்திருக்கிறேன் எனவா சொல்லமுடியும்?

அக்காலத்தில் சிங்கப்பூர் குடை லக்ஸ் சோப் இந்தியாவில் கிடைக்காததால் உனக்கு உபயோகமாக இருக்கும் என மன்னாரில் மாமி அவற்றை வாங்கித் தந்திருந்தார். அவற்றை அவர்களிடம் விற்றபோது மூன்னூறு இந்திய ரூபாய்கள் கையில் கிடைத்தது.

(தொடரும்)

நடேசன் <uthayam12@gmail.com>

கவிதை



# ஷங்கர்ராமசுப்ரமணியன் கவிதைகள்

## 1. பைரவ பிச்சாடனர்

இரண்டு ஆசாமிகளும் சிவ மூர்த்தங்கள்தான்
ஒருவன் துளியிலிருந்து முளைத்தவன்
பிந்தையவனோ சிவனையும் துறக்க தோஷம்பிடித்து அலைந்தவன்
அதனால்தான் அவன் கையில் துள்ளிய
மான் கீழே இறங்கியது
பிச்சாடனரின் கை அருகம்புல்லை
கவ்வத் துள்ளும்போது
பைரவரின் நாயாகி விடுகிறது
பைரவரின் நாய்
இப்போதும்
பிச்சாடனரின் மான் ஆவது
சொல்லாமல் விடுபட்டது
பைரவர் கை இறைச்சியைத்
தொடரத் தொடங்கியபோதுதான்
நாயுடன் தொடங்கியிருக்க வேண்டும்
எமது சகவாசம்
இரைக்குத் துள்ளும் கணத்தில்
நாய் மான்
மான் நாய்.
பைரவர் கையில் அருகம்புல்
பிச்சாடனர் கையில் இறைச்சி
நாய்கள்
மான்கள்

உயிர்
துள்ளும்
அழகு

உயிர்
துள்ளும்
கலை

உயிர்
துள்ளும்
அறிவு

உயிர்
துள்ளும்
விடுதலை

பசி என்று பெயர் கொண்டது
பசி என்று பெயர் கொண்டது
பசி என்று பெயர் கொண்டது.

*(ந.ஜயபாஸ்கரனுக்கு)*

## 2. அன்புக்கு எத்தனை கால்கள்

இரண்டு கால்கள்
நான்கு கால்கள்
பதினாறு கால்கள்
கொண்ட அன்பை
இங்கே
நான் எப்படிப் பாதுகாத்துப் பராமரிப்பேன்?

ஒரு முக்காலி போடும் அளவே இடமுள்ள
கிரகத்தில் கூட
குட்டி இளவரசனால்
தனது நேசத்துக்குரிய
ரோஜாவை
ஒரு ஆட்டின் துர்வாயிலிருந்து காப்பாற்ற முடியவில்லை
எனும்போதுஞ்
நான் எப்படி என் அன்பைப் பாதுகாத்துப்
பராமரிக்கப் போகிறேன்?

முந்தின தினத்தின் முடிவில்
முளைத்திருந்த களைகளையெல்லாம்
புன்னகையுடன் பிய்த்தெறிகிறேன்
ஊற்றிய பிறகு என் விரலின் நுனியால்
அதன் தலையைத் தட்டிக் கொடுக்கிறேன்
வீட்டுக்கு வெளியே வழிகள் நீள்வது
புதிராவது
அங்கே மனிதர்கள் அன்னியர்கள் என்பதால்
வாசல் கதவை நன்றாகச் சாத்திவைக்கிறேன்
காகிதம் பிளாஸ்டிக் குப்பை உலோகங்கள் உணவு
எதையும் பிரித்துப் பார்க்க
என் அன்பின் நாவுக்குத் தெரியாது
குனிந்து குனிந்து தரையில் பொறுக்கியபடியே
நடக்கிறேன்
காலிடுக்கில் ஒரு உடைந்த பிளேடைப் பார்த்து
எடுக்கும்போதுதான்
உணர்ந்தேன்

எத்தனை பிளேடுகள்
எத்தனை கூர்முனைகளை அகற்றி
என் அன்பைப் பாதுகாத்துப் பராமரிக்கப் போகிறேன்

எட்டுத் திசைகளிலும்
ஓட்டைக் கதவுகள்
உயரம் குறைந்த வலுவற்ற சுவர்கள்
பரிச்சயமற்ற அந்நியர்கள்
வீடு திரும்ப முடியாமல்
என் அன்பை ஆக்கும் இந்திர ஜாலங்கள்
இந்த உலகில்
என் அன்பை எப்படிப் பாதுகாத்துப் பராமரிக்கப்
போகிறேன்?

ஆம்
என் அன்புதான் என் அன்பை
தனித்துவமாக்குகிறது
என் அன்புதான் எனக்கு
அதைப் பாதுகாக்கும் பொறுப்பையும் தருகிறது
என் ரோஜாவை
என் நேசத்தைப் பரிச்சயம் செய்தபின்னர்தான்



அனைத்து ரோஜாக்களிலும்
என் நேசத்தின் சாயல் தெரிகிறது

ஆம், முரணானது தான்

இந்தக் கிரகத்தில்
காதல் விடைபெறும்போது
காதல் தப்பிக்கும்போது
காதலை அதீதமாக உணர்வது

அன்பே
அன்பே
அன்பே

குட்டி இளவரசனைப் போல்
தனிமையாக உணர்கிறேன்
நானும்
பிரியம் கொண்ட ரோஜாவிடமிருந்து
மிகத் தொலைவில் இருக்கிறேன். ●

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
**<shankarashankara@gmail.com>**

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200



Rs. 100



Rs. 80



Rs. 90



Rs. 90

**அம்ருதா**
#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com